Ims0354

ஸ்ரீ

# செய்யுட் கொத்து

## முதல் பாகம்

இது

சென்னைப் பச்சையப்பன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்கள்

கா. ர. கோவிந்தராஜ முதலியார்

ஆ. வீ. கன்னைய நாயுடு

தொகுத்தது.

சென்னை

இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட்

1922

விலை அணு எட்டு]

[காபி ரைட்.




# பொருளடக்கம்



ஸ்ரீ

# செய்யுட் கொத்து.



## ஆழ்வார் துதி.



நேரிசை வெண்பா.

1. சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ ?
நாமம் பராங்குசமோ நாரணமோ?—தாமம்
துளவோ வகுளமோ? தோளிரண்டோ நான்கோ ?
உளவோ பெருமா னுனக்கு

### விநாயகர் துதி.

2. வஞ்சகத்தி லொன்றானைத் துதிக்கைமிகத்
திரண்டானை வணங்கா ருள்ளே
அஞ்சாண மூன்றானை மறைபொழிநால்
வாயானை அத்த னாகித்
துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி
யாறானைத் துகளை றானைச்
செஞ்சொல்மறைக் கெட்டானைப் பாங்கிரிவாழ்
கற்பகத்தைச் சிந்தை செய்வாம்.

## திருமால் துதி.



### எண்சீர் ஆசிரிய விருத்தம்.

3. மருவு தந்தையும் குருவு மெந்தையும்
மருள்கெ டுப்பதும் அருள்கொ டுப்பதும்
உருகு நெஞ்சமும் பெருகு தஞ்சமும்
உரிய ஞானமும் பெரிய வானமும்
திருவ ரங்கனர் இருவர் அங்கனர்
செங்கண் மாயனர் எங்கள் ஆயனர்
அருள்மு குந்தனர் திருவை குந்தனர்
அமல நாதனர் கமல பாதமே.

### கட்டளைக் கலித்துறை.

4. புலையாம் பிறவி பிறந்தென்செய் தோம்?பொன்னி பொன்கொழிக்கும்
அலையார் திருவரங் கத்தெம்பி ரான்நம தன்னையொடும்
தொலையாத கானங் கடந்தஅந் நாள்தடந் தோறும் புல்லாய்ச்
சிலையாய்க் கிடந்தில மே! நெஞ்ச மேகழல் தீண்டுகைக்கே.

### கலி நிலைத்துறை.

5. காயிலை தின்றும் கானிலு றைந்தும் கதிதேடித்
தீயிடை நின்றும் பூவலம் வந்தும் திரிவீர்காள்!
தாயிலு மன்பன் பூமகள் நண்பன் தடநாகப்
பாயல்மு குந்தன் கோயில ரங்கம் பணிவீரே.

## நேரிசை வெண்பா.

6. கேசவனை யேசெவிகள் கேட்க; திருவரங்கத்(து)
ஈசனையே சென்னி யிறைஞ்சிடுக;—நேசமுடன்
கண்ணனையே காண்கவிரு கண்;இணர்கொள் காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துகவென் வாய்.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்.

7. இருளினும் வெளியினும் மருளினும் தெருளினும்
இன்பமே யடையினும் துன்பமே மிடையினும்
ஒருவர்முன் புகழினும் இருவர்பின் பிகழினும்
ஊனிறந் தழியினும் யான்மறந் தொழிவனோ ?
சுருதிநின் றோலிடும் காதலம் நாலொடும்
துவளுநூல் மார்பமும் பவளவாய் மூரலும்
திருவரங் கேசர்தம் சுருள்கருங் கேசமும்
செய்யநீண் முடியும்அத் துய்யசே வடியுமே.

## நேரிசை வெண்பா.

8. வேலையுல கிற்பிறக்கும் வேலையொழிந் தோமில்லை;
மாலையரங் கேசனைநாம் மாலையிலும்—காலையிலும்
உன்னினைந் தோமில்லை ; உடலெடுத்த அன்றுமுதல்
என்நினைந்தோம் ? நெஞ்சே யிருந்து.

9. முன்னம் பிறந்த பிறப்போ முடிவில்லை;
இன்னம் பிறப்பிக்க எண்ணாதே;—தென்னரங்கம்
மேவிக் கிடந்தானே ! வீற்றிருக்கும் நின்பதத்தென்
ஆவிக் கிடந்தா னருள்.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்.

10. வடியாத பவக்கடலும் வடிந்து மூல
மாயைகடந் தப்பாற்போய் வைகுந் தஞ்சேர்ந்(து)
அடியார்கள் குழாங்கூடி உனத டிக்கீழ்
அடிமைசெயும் அக்காலம் எக்கா லந்தான்?
கொடியாடு மணிமாட வயோத்தி மூதூர்
குடிதுறந்து திருவரங்கங் கோயில் கொண்ட
நெடியோனே! அடியேன்நான் முயற்சி யின்றி
நின்னருளே பார்த்திருப்பன் நீச னேனே.

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.

## கலி விருத்தம்.

11. அருமறை முதல்வனை யாழி மாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிக ளிறைஞ்சி யேத்துவாம்.

12. தேடிய வகலிகை சாபந் தீர்த்ததாள்
நீடிய வுலககெலா மளந்து நீண்டதாள்
ஓடிய சகடிற வுதைத்துப் பாம்பின்மேல்
ஆடியுஞ் சிவந்ததா ளென்னை யாண்டதாள்.

## கோச்சகக் கலிப்பா.

13. பொய்யாத தவமுனிபின் போயருளித் தாடகைதன்
மெய்யாவ நிகரென்ன வெஞ்சாத்தா லழுத்தியபின்
மையாழி முகில்வண்ணன் வாங்கியன பூங்கமலக்
கையாலு மொருசாபம் காலாலு மொருசாபம்.

வேறு

14 மீனுமை கோலநெடு நாசிங்க மாகிநிலம் விரகால ளந்த
குறளாய்
ஆனாத சீருமழு வல்வில்லும் வெல்லுமுனை யலமுற்ற
செங்கை யவராய்
வானாடர் வந்துதொழ மண்ணாடர் யாவரையும் வாழ்
விக்க வந்த வடிவாய்
நானாவி தங்கொள்புரி யாளாகி நின்றருளும் நாராய
ணாய நமவே.

வில்லிபுத்தூர் ஆழ்வார்.

## சிவநாம மகிமை.

கலி விருத்தம்.

15. வேத மாகமம் வேறும்ப லப்பல
ஓதி நாளுமு ளந்தடு மாறன்மின்;
சோதி காணிருள் போலத்தொ லைந்திடும்
தீதெ லாமும் ; சிவசிவ வென்மினே.

16. புல்ல ராயினும் போதக ராயினும்
சொல்வ ராயிற் சுருதி விதித்திடும்
நல்ல வாகும் நவையென் றகற்றிய
செல்லல் தீரும் ; சிவசிவ வென்மினே.

17. நாக்கி னானு நயனங்க ளானுமிவ்
வாக்கை யானு மருஞ்செவி யானுநம்
மூக்கி னானு முயங்கிய தீவினை
தீர்க்க லாகும் ; சிவசிவ வென்மினே.

18. சாந்தி ராயண மாதித வத்தினல்
வாய்ந்த மேனி வருத்த விறந்திடாப்
போந்த பாதக மேனும் பொருக்கெனத்
தீர்ந்து போகும் ; சிவசிவ வென்மினே.

19. வில்லி தென்னவி ளங்குந்தி ருநுதல்
வல்லி பங்கன் மலரடி காணிய
கல்வி நல்குங் கருத்து மகிழ்வுறும்
செல்வ நல்கும் ; சிவசிவ வென்மினே.

20. எண்ணி நெஞ்சிற் சிவசிவ வென்பவர்
வண்ண மென்பதம் கிட்டிவ ணங்கவும்
உன்ன டுங்குவ னெண்திறல் கூற்றுவன்
திண்ண மீது சிவசிவ வென்மினே.

சிவப்பிரகாச சுவாமிகள்.

அருள் விளக்க மாலை.

21. கதிக்குவழி காட்டுகின்ற கண்ணே! யென் கண்ணில்
கலந்தமணி யே! மணியில் கலந்தகதி ரொளியே!
விதிக்குமுல குயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே!
மெய்யுணர்ந்தோர்கையகத்தேவிளங்கியதீங்கனியே!
மதிக்குமதிக் கப்புறம்போய் வயங்குதனி நிலையே!
மறைமுடியா கமமுடிமேல் வயங்குமின்ப நிறைவே!
துதிக்குமன்பர் தொழப்பொதுவில் நடம்புரியு மரசே!
சொல்மாலை சூட்டுகின்றேன் தோளிலணிந் தருளே.

22. தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தெங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி

இனித்தநறு நெய்யளிந்தே யிளஞ்சூட்டி னிறக்கி
எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடுந்தெள் ளமுதே!
அநித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே!
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கலணிந் தருளே. (4)

23. கையாத தீங்கனியே! கயக்காதே வமுதே!
கரையாத கற்கண்டே! புரையாத கரும்பே!
பொய்யாத பெருவாழ்வே! புகையாத கனலே!
போகாத புனலே! உள் வேகாத காலே!
கொய்யாத நறுமலரே! கோவாத மணியே!
குளியாத பெருமுத்தே! ஒளியாத வெளியே!
செய்யாத பேருதவி செய்தபெருந் தகையே!
தெய்வநடத் தரசே! என் சிறுமொழியேற் றருளே.

இராமலிங்க சுவாமிகள்.



## நள வெண்பா.



### சுயம்வர காண்டம்.

காப்பு.

நேரிசை வெண்பா.

1. நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாப்—* பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்தமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்தாள் மலர்.

* "ஈசன், கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட, கரியான னத்தான் கழல்" எனவும் பாடபேதமுண்டு.

2. ஆதித் தனிக்கோல மானன் ; அடியவற்காச்
சோதித் திருத்தூணில் தோன்றினன்;—வேதத்தின்
முன்னின்றான், வேழ முதலே யெனவழைப்ப
என்னென்று னெங்கட் கிறை.

3. கலாப மயிலிருந்த பாகத்தார், கங்கை
உலாவு சடைமே லுறையும்—நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகம்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு.

அவை யடக்கம்.

4. வெந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின் [யில்
தந்துவினல் கட்டச் சமைவதொக்கும்-பைந்தொடை
தேன்பாடுந் தார்நளன்தன் தெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது.

நூல்.

5. காமர் கயல்புரளக் காவி முகை நெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகாஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

6. மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணை நகர் தானென்றுஞ் சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.

7. வாங்கு வளைக்கையார் வதன மதிபூத்த [த்
பூங்குவளைக் காட்டிடையே போயினன்—தேங்குவளை
தேனுடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

8. நீணிறத்தால் சோலை நிறம்பெயா நீடியதன் [தான்
தாணிறத்தால் பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்
முன்னப்புள் தோன்றும் முளரித் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே யாங்கு.

(அவ்வன்னப் பறவை நளன் கையிலகப்பட, அவன் அதற்கு யாதொரு துன்பமுஞ் செய்திலன்; அதைக் கண்டு களிப்படைந்த அப்பறவை அவனை நோக்கி,)

9. வீமன் திருமடந்தை மென்மாலை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்;—சேம
நெடுங்குடையாய்! என்றுரைத்து நீங்கியதே அன்னம்
ஒடுங்கிடையாள் தன்பா லுயர்ந்து.

10. மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய—நன்னுதலும்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னுடல்? சொல்லென்று ளீங்கு.

11. செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்
கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்—மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளனென்பான் வேந்த னுனக்கு.

12. அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்தோள் வலியும்—திறங்கிடந்த
செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ?
அங்கண்மா ஞாலத் தவற்கு.

13. வாவி யுறையும் மடவனமே! என்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்
பார்வேந்தன் பாவை பதைத்து. [றுரைத்தாள்.

(தன் மகளாகிய தமயந்தி விவாக பருவத்திற் குரியவளான தைக் கண்ட வீமராசன்,

14. மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கும் அறைகென் றியம்பினன்—பைங்கமுகின்
கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடு நன்னுடன்
வேந்தர்மேல் தூதோட விட்டு.

15. புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்தன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

16. கெட்ட சிறுமருங்குல் கிழ்மகளிர் நீள்வரம்பின்
இட்ட பசுங்குவளை யோடித்த—கட்டி
கரையத்தே னூறுங் கடல்நாட னூர்க்கே
விரையத்தே ரூரென்றான் வேந்து.

(தேரேறிச் சென்ற நளன் வீமன் நகராகிய குண்டினபுரத்தை யணுக,)

17. காவல்குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவல் தொழிலுக் கிசையென்றான், — ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான், மனத்தினுல் மற்றதனை
இன்னதென ஓரா திசைத்து.

18. செங்கண் மதயானை நேர்வேந்தே! தேமாலை
எங்களிலே சூட்ட இயல்வீமன் — மங்கைபால்
தூதாகவென்றான்; அத் தோகையைத்தன் ஆகத்தால்
கோதாக வென்றானக் கோ.

(நளன் அதற்கிணங்கித் தமயந்தியைச் சென்று காணுதலும் அவள்,)

19. காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ? விஞ்சைக் கிறைவனோ? — தேவனோ?
உள்ளவா சொல்லென்றாள் ஊசல் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு.

(நளன் தானின்னா னென்பதைத் தமயந்திக் குணர்த்திய பின்னர்.)

20. என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை — மென்மாலை
சூட்டுவா யென்றான் ; தொடையில்தேன் தும்பிக்கே
ஊட்டுவா னெல்லா முரைத்து.

21. பேர்தரிக்கண் மாதராள், பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே — சோதிச்
செழுந்தாள வெண்குடையாய்! தேவர்களும் நீயும்
எழுந்தருள்க வென்றா ளெடுத்து.

22 விண்ணவர்த மேவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும் நன்குரைத்த-பெண்ணணங்கின்
வன்மொழியுந் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு.

23. அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்று யெனவருண னுகண் டலன்தருமன்
மற்றோனு மீந்தார் வரம்.

24. வையம் பகலிழப்ப, வானம் ஒளியிழப்பப்
பொய்கையும் நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
செவ்வாய வன்றில் துணையிழப்பச் சென்றடைந்தான்;
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு.

25. மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

26. ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர்—காக்க
இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடைவா யிருள்புடைத்தாற் போன்று.

27. வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள் கிழியத் தோன்றினன் ;—வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

28. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்-மின்னிறத்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்[துச்
பொய்கைவாய்ப் போவதே போன்று.

29. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு— முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்;
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

30. காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார் ;—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாநின்(று)
ஊசலா டுற்றா ளுளம்.

31. மின்னுந்தார் வீமன்தன் மெய்ம்மரபில் செம்மைசேர்
கன்னியா ளுகில் கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் ; சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து.

32. கண்ணிமைத்த லாலடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே யன்னாள்
அறிந்தாள் நளன்தன்னை யாங்கு.

33. விண்ணாச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகல் ஞாலங் களிகூர—மண்ணாசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

34. திண்தோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்தா மரையாய் வெளுத்தவே;—ஒண்தாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.

35. வேலை பெருவமுதம் வீமன் திருமடந்தை
மாலை பெறுதகலும் வானுடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கும்
இருங்கலியைக் கண்டா ரெதிர்.

36. ஈங்கு வாவென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினான்—நீங்கள்
விருப்பான வீமன் திருமடந்தை யோடும்
இருப்பான் வருகின்றேன் யான்.

37. முன்னவரில் வைவேல் நளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்—உன்னுடைய
உள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து.

38. விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசற் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன்; மற்றவள்தன் கேள்வனுக்குங் கீழ்
கொடுக்கின்றே னென்றான் கொதித்து. [மை

39. வாய்மையுஞ் செங்கோல் வளனும் மனத்தின்கண்
தூய்மையும் மற்றவன்தன் தோள்வலியும்—பூமான்
நெடுங்கற்பும் மற்றவர்க்கு நின்றுரைத்துப் போனான்
அடுங்கொற்ல வச்சிரத்தா னங்கு.

40. செருக்கதிர்வேல் கண்ணியுடன் தேர்வேந்தன் கூட
இருக்கத் தரியே னிவரைப்—பிரிக்க
உடனுக வென்ருன் ; உடனே பிறந்த
விடனுக மன்னுன் வெகுண்டு.

41. கணிமொழிந்த நாளில் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மண்ண வைர்க்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றேவ ரொவ்வார் மகிழ்ந்து.

புகழேந்திப் புலவர்.



## கண்ணப்ப நாயனுர் புராணம்.



### அறுசீர் ஆசிரிய விருத்தம்.

(பொத்தப்பி நாட்டில் உடுப்பூரில், இருள்போன்ற நிறமுடைய வேடர்களுக்குத்தலைவனெருவனிருந்தான். அவன்யாவனெனின்,)

1. மைச்செறிந் தனையமேனி வன்தொழில் மறவர்தம்பால்
அச்சமும் அருளு மென்றும் அடைவிலார் ; உடை வன் தோலார்;
பொச்சையின் நறவும் ஊனின் புழுக்கலும் உணவு கொள்ளும்
நச்சுழல் பகழி வேடர்க் கதிபதி நாக னென்பான்.

(அவன் கற்பினருந்ததியை யொத்த தத்தை யென்பவளை மணம் புரிந்து கொண்டனன். அவ்விருவரும் பலநாளளவும் தமக்குப் புத்திரப்பேறில்லாமல் மிகவும் வருந்தி, பின்னர் முருகக் கடவுளின் கருணையால் ஓராண் குழவியைப் பெற்றனர்.)

2. கருங்கதிர் விரிக்கு மேனி காமரு குழவி தானும்
இரும்புலிப் பறழி னோங்கி யிறவுள ரளவே யன்றி
அரும்பெற லுலக மெல்லாம் அளப்பரும் பெருமை காட்டித்
தருங்குறி பலவுஞ் சாற்றுந் தன்மையிற் பொலிந்து தோன்ற.

3. அண்ணலைக்கையிலேந்தற் கருமையா லுரிமைப்பேரும்
திண்ணனென் றியம்பு மென்னத் திண்சிலை வேடரார்த்தார் ;
புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீர் உருவினானைக்
கண்ணினுக் கணியாத் தங்கள் கலன்பல வணிந்தாரன்றே.

4. வண்ணவெஞ் சிலையு மற்றப் படைகளு மலாக் கற்றுக்
கண்ணகன் சாயல் பொங்கக் கலைவளர் திங்களேபோல்
எண்ணிரண் டாண்டின் செவ்வி யெய்தினர் ; எல்லையில்லாப்
புண்ணியந் தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார்.

(அத்தருணம் இவர் பிதாவுக்கு முதுமை மேலிடவே, அவர் இவரை வேடர்க்கரசனாக்கித் தமது வாளுங் கேடகமு மளித்து வேட்டைமேல்செல்ல விடுத்தனர். அப்போது இவரைச்சூழ்ந்து,)

5. தாளில் வாழ்செருப்பர் தோல்தழைத்தநீடு தானையார்
வாளி யோடு சாப மேவு கையர் வெய்ய வன்கணார்
ஆளி யேறுபோல வரும் அண்ண லார்முன் எண்ணிலா
மீளி வேடர் நீடு கூட்டம் மிக்கு மேலெ ழுந்ததே. [ர்

6. ஏன மோடு மானி னங்கள் எங்கு திண்க லைக்குலம்
கான மேதி யானை வெம்பு லிக்க ணங்கள் கான்மரை
ஆன மாவ நேக மாம ருண்டெ ழுந்து பாயமுன்
சேனை வேடர் மேல டர்ந்து சீறி யம்பின் நூறினார்.

(அத்தருணங் கரிய பெரிய பன்றி யொன்று தன்னைப்பிணித்த வலையை யறுத்தெறிந்து மிக்க விரைவாய்த் தாவி யோடினது. அது கண்ட திண்ணனார், அதனைக்கொல்லக் கருதி விடாது பின் தொடர்ந்தோடினர். அப்போது நாணன், காடன் என்னுமிருவரும் அவர் பின் சென்றனர்.)

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

7. வேடர்தங் கரிய செங்கண் வில்லியார் விசையிற் குத்த
மாடிரு துணியாய் வீழ்ந்த வராகத்தைக் கண்டுநாணன்
காடனே! இதன்பின் இன்று காதங்கள் பலவந் தெய்த்
தோம்;
ஆடவன் கொன்றான் அச்சோ! என்றவ ரடியில்
தாழ்ந்தார்.

8. மற்றவர் திண்ண னார்க்கு மொழிகின்றார் வழிவந் தாற்ற
உற்றது பசிவந் தெம்மை; உதவிய இதனைக் காய்ச்சிச்
சற்றுநீ யருந்தி யாமுந் தின்றுதண் ணீர்கு டித்து
வெற்றிகொள் வேட்டைக் காடு குறுகுவோம் மெல்ல
வென்றார்.

9. என்றவர் கூற நோக்கித் திண்ணனார் தண்ணீ ரெங்கே
நன்றுமிவ் வனத்தி லுள்ள தென்றுரைசெய்ய,நாணன்
நின்றவிப் பெரிய தேக்கின் அப்புறஞ் சென்றால் நீண்ட
குன்றினுக் கயலே யோடுங் குளிர்ந்தபொன் முகலி
யென்றான்.

10. பொங்கிய சினவில் வேட்ன் சொன்னபின், போவோ மங்கே
இங்கிது தன்னைக் கொண்டு போதுமி னென்னத் தாமும்
அங்கது நோக்கிச் சென்றார், காவத மரையிற் கண்டார்;
செங்கணே றுடையார் வைகுந் திருமலைச் சாரற்சோலை.

11. நாணனே! தோன்றுங் குன்றில் நண்ணுவே மென்ன, நாணன்
காணநீ போதி நல்ல காட்சியே காணும்; இந்தச்
சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசையெழுந்து செவ்வே
கோணமில்குடுமித்தேவரிருப்பர்கும்பிடலாமென்றான்.

12. மாகமார் திருக்கா ளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள
ஏகநாயகரைக் கண்டார், எழுந்தபேருவகை யென்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமா யோடிச் சென்றார், தழுவினார், மோந்து நின்றார்.

13. இவர்தமைக் கண்டே னுக்குத் தனியரா யிருந்தாரென்னே!
இவர்தமக் கமுது செய்ய இறைச்சியு மிடுவா ரில்லை;
இவர்தமைப் பிரிய வொண்ணா தென்செய்கேன் இனி யான் சால,
இவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும் வேண்டு மென்று.

14. போதுவர் மீண்டு செல்வர்; புல்லுவர் மீளப் போவர்;
காதலின் நோக்கி நிற்பர்;கன்றகல் புனிற்றுப்போல்வர்;
நாதனே! அமுது செய்ய நல்லமெல் லிறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவே னென்பார்.

15. கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில் வேவ,
வாலிய சுவைமுன் காண்பான் வாயினி லதுக்கிப் பார்த்துச்
சாலவு மினிய வெல்லாஞ் சருகிலே யிணைத்த கல்லே
ஏலவே கோலிக் கூட அதன்மிசை யிடுவா ரானர்.

16. தேவுமால் கொண்டா னிந்தத் திண்ணன்மற் றிதனைத் தீர்க்க
ஆவதொன் றறியோந் தேவ ராட்டியை நாக னேடு
மேவிநாங் கொணர்ந்து தீர்க்க வேண்டும்; அவ் வேட்டைக் கானில்,
ஏவலாட் களையுங் கொண்டு போதுமென் றெண்ணிப் போனர்.

17. கானவர் போன தோரார் கடிதினிற் கல்லே யின்கண்
ஊனமு தமைத்துக் கொண்டு மஞ்சன மாட்ட வுன்னி
மாநதி நன்னீர் தூய வாயினிற் கொண்டு, கொய்த
தூநறும் பள்ளித் தாமங் குஞ்சிமேல் துதையக் கொண்டார்.

18. தனுவொருகையில் வெய்ய சரத்துடன்தாங்கிக்கல்லேப்
புனிதமெல் லிறைச்சி நல்ல போனக மொருகை யேந்தி
இனியவெம் பிரானர் சாலப் பசிப்பரொன் றிரங்கியேங்கி
நனிவிரைந் திறைவர் வெற்பை நண்ணினர் திண்ணனர்தாம்.

19. இளைத்தனர் நாய னரொன் றீண்டச்சென் றெய்தி, வெற்பின்
முளைத்தெழு முதலேக் கண்டு முடிமிசை மலரைக் காலில்

வளைத்தபொன் செருப்பால் மாற்றி வாயில்மஞ் சனநீர் தன்னை
விளைத்தவன் புமிழ்வார் போல விமலனூர் முடிமேல் விட்டார்.

20. கொழுவிய தசைக ளெல்லாங் கோலினில் தெரிந்து கோத்தங்(கு.)
அழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினு லதுக்கி நாவில்,
பழகியஇனிமை பார்த்துப்படைத்தஇவ்விறைச்சிசால
அழகிதுநாய னீரே! அமுதுசெய் தருளுமென்றார்.

21. அவ்வழி யந்தி மாலை யணைதலு மிரவு சேரும்
வெவ்விலங் குளவென் றஞ்சி மெய்ம்மையின் வேறு கொள்ளாச்
செவ்விய அன்பு தாங்கித் திருக்கையிற் சிலையுந் தாங்கி,
மைவரை யென்ன ஐயர் மருங்குநின் றகலா நின்றார்.

22. வருங்கறைப் பொழுது நீங்கி மல்கிய யாமஞ் சென்று
சுருங்கிட அறிந்த புள்ளின் சூழ்சிலம் போசைகேட்டுக்
கருங்கட லென்ன நின்று கண்துயி லாத வீரர்
அரும்பெறல் தம்பி ரானூர்க் கமுதுகொண் டணைய வேண்டி;

23. ஏறுகால் பன்றி யோடு மிருங்கலை புனமான் மற்றும்
வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகி னாலே
ஊறுசெய் காலஞ் சிந்தித் தருமிகத் தெரியாப்போதின்
மாறடு சிலையுங்கொண்டுவள்ளலைத்தொழுதுபோந்தார்.

(இவர் வேட்டைக்குச் சென்றதும் பொழுது புலர்ந்தது. அப்போது சிவகோசரியார் என்னும் பிராமணா தமது வழக்கப்படி சிவபிரானைப் பூசிக்கவந்தனர். அவர் சிவபெருமான் திருக்கோயிலில் எலும்பும் இறைச்சியு மிறைந்து கிடப்பதைக் கண்டு வருந்தி அக்கடவுளுக்கு அபிஷேகம் முதலியவற்றை நடத்தி அவரை வழிபட்டுச் சென்றனர். பிறகு திண்ணனுர்,)

கோச்சகக் கலிப்பா.

24. நல்லபத முறவெந்து நாவின்கண் ணிடுமிறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்துகலந் ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமுந்துாய் மஞ்சனமும்
ஒல்லையினில் முன்புபோ லுடன்கொண்டு வந்தணைந்தார்.

25. வந்துதிருக் காளத்தி மலையேறி வனசரர்கள்
தந்தலைவ னுரிமையோர் தலைவனுர் தமையெய்தி
அந்தணனுர் பூசையினை முன்புபோ லகற்றியபின்
முந்தைமுறைதம்முடையபூசனையின்செயல்முடிப்பார்.

26. ஊனமுது கல்லையுடன் வைத்திதுமுன் னையின்நன்றால்
ஏனமொடு மான்கலைகள் மரைகடமை யிவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சியமு தடியேனுஞ் சுவைகண்டேன்
தேனுமுடன் கலந்ததிது ; தித்திக்கு மெனமொழிந்தார்.

27. இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியி லொழுகுவார்
எப்பொழுதும் மேன்மேல்வந் தெழுமன்பால் காளத்தி
அப்பரெதிர் அல்லுறங்கார் பகல்வேட்டை யாடுவார்.

28. மாமுனிவர் நாடோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாமுயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமையென அதுநீக்கிச் செப்பியவா கமவிதியால்
ஆமுறையி லருச்சனைசெய் தந்நெறியி லொழுகுவால்.

29. அங்கிலையி லன்பனு ரறிந்தநெறிப் பூசிப்ப,
மன்னியவா கமப்படியால் மாமுனிவ ரருச்சித்திங்(கு)
என்னுடையநாயகனே! இதுசெய்தார்தமைக்காணேன்
உன்னுடையதிருவருளாலொழித்தருளவேண்டுமென;

30. அன்றிரவு கனவின்க ணருள்முனிவர் தம்பாலே
மின்றிகழும் சடைமவுலி வேதியர்தா மெழுந்தருளி
வன்றிறல்வே டுவனென்று மற்றவனை நீநினையேல்!
நன்றவன்தன் செயல்தன்னை நாமுரைப்பக்கேளென்று;

31. உனக்கவன்தன்செயல்காட்டநாளைநீயொளித்திருந்தால்
எனக்கவன்தன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண் [கின்றாய்.
மனக்கவலை யொழிகென்று மறைமுனிவர்க் கருள் செய்து
புனல்சடிலத் திருமுடியா ரெழுந்தருளிப் போயினார்.

32. முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனல்மூழ்கிப்
பன்முறையுந் தம்பிரா னருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக் காளத்தி மலையேறி முன்புபோல்
பின்னுகனைப் பூசித்துப் பின்பாக ஒளித்திருந்தார்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்.

(அப்போது திண்ணனர்,)

33. மாறிலா னமுது நல்ல மஞ்சனப் புனலுஞ் சென்னி
ஏறுநாள் மலரும் வெவ்வே றியல்பினி லமைத்துக் கொண்டு
தேறுவார்க் கமுத மான செல்வனர் திருக்கா ளத்தி
ஆறுசேர் சடையார் தம்மை யணுகவந் தணையா நின்றார்.

34. அண்ணலார்திருக்கா ளத்தி யடிகளார் முனிவனர்க்குத்
திண்ணனர் பரிவு காட்டத் திருநய னத்தி லொன்று
துண்ணென உதிரம் பாய இருந்தனர்! தூசத் தேயவ்
வண்ணவெஞ் சிலையார்கண்டு வல்விரைந் தோடிவந்தார்.

35. வந்தவர் குருதி கண்டார், மயங்கினர், வாயில் நன்னீர்
சிந்திடக் கையி லூனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சிநின் றலைந்து சோரப்
பைந்தழை யலங்கல் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார்.

36. பாவியேன் கண்ட வண்ணம் பரமனர்க் கடுத்த தென்னே?
ஆவியி னினிய எங்க ளத்தனர்க் கடுத்த தென்னே?
மேவினர் பிரிய மாட்டா விமலனர்க்கடுத்த தென்னே?
ஆவதொன் றறிகி லேன்யான்; என்செய்கேன்? என்று பின்னும்.

37. நினைத்தனர் வேறுவேறு; நெருங்கிய வனங்களெங்கும்
இனத்திடைப் பிரிந்த செங்க ணேறென வெருக்கொ
ண்டெய்திப்
புனத்திடைப் பறித்துக் கொண்டு பூதநா யகன்பால்
வைத்த
மனத்தினும் கடிதுவந்துமருந்துகள்பிழிந்துவார்த்தார்.

38. மற்றவர் பிழிந்து வார்த்த மருந்தினல் திருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணில் புண்ணீர் குறைபடா திழியக்
கண்டும்
இற்றையிந் நிலைமைக் கென்னோ இனிச்செய லென்று
பார்ப்பார்
உற்றநோய் தீர்ப்ப தூனுக்(கு) ஊனெனு முறைமுன்
கண்டார்.

39. இதற்கினி யென்கண் அம்பால் இடந்தப்பி னெந்தை
யார்கண்
அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர்நிற்கவுமடுக்குமென்று
மதர்த்தெழு முள்ளத் தோடு மகிழ்ந்துமுன் னிருந்து
தங்கண்
முதற்சா மடுத்து வாங்கி முதல்வர்தங் கண்ணி லப்ப.

40. நின்றசெங் குருதி கண்டார்; நிலத்தில்நின் றேறப்
பாய்ந்தார்;
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினர்;
[கூத்துமாடி
நன்றுநான் செய்த இந்த மதியென நகையுந்தோன்ற
ஒன்றிய களிப்பி னலே உன்மத்தர் போல மிக்கார்.

41. வலத்திருக் கண்ணீர் தங்க அப்பிய வள்ள லார்தம்
நலத்தினைப் பின்னுங் காட்ட நாயனர் மற்றைக் கண்
ணில்

உலப்பில்செங் குருதி பாயக் கண்டனர்; உலகில் வேடர்
குலப்பெருந் தவத்தால் வந்து கொள்கையி னும்பர்
மேலார்.

42. கண்டபின் கெட்டே னெங்கள் காளத்தி யார்கண்
ணென்று
புண்தரு குருதி நிற்க மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டும்; மற் றிதனுக் கஞ்சேன்; மருந்துகைக் கண்
டேன்; இன்னும்
உண்டொரு கண்; இக்கண்ணை யிடந்தப்பி யொழிப்பே
னென்று.

43. கண்ணுதல் கண்ணில் தங்கண் இடந்தப்பிக் காணுநோர்
பா(டு)
எண்ணுவார் தம்பி ரான்தன் திருக்கண்ணி லிடக்கா
லூன்றி
உண்ணிறை விருப்பி னேடு மொருதனிப் பகழி கொ
ண்டு
திண்ணனூர் கண்ணி லூன்றத் தரித்திலர் தேவதேவர்.

44. செங்கண்வெள் விடையின் பாகர் திண்ணனூர் தம்மை
யாண்ட,
அங்கணர் திருக்கா ளத்தி யற்புதர் திருக்கை யன்பர்
தங்கண்முன் னிடக்குங் கையைத் தடுக்குமூன் றடுக்கு
நாக
அங்கண ரமுத வாக்குக் கண்ணப்ப! நிற்க வென்ற.

45. கானவர் பெருமா னூர்தங் கண்ணிடந் தப்பும்போதும்
ஊனமு துகந்த ஐயர் உற்றுமுன் பிடிக்கும் போதும்
ஞானமா முனிவர் கண்டார்; நான்முகன் முதலாயுள்ள
வானவர் வளர்பூ மாரி பொழிந்தனர் மறைக ளார்ப்ப.

46. பேறினி யிதன்மே லுண்டோ? பிரான்திருக் கண்ணில்வந்த,
ஊறுகண் டஞ்சித் தங்கண்ணிடந்தப்ப உதவுங்கையை
ஏறுயர்த் தவர்தங் கையால் பிடித்துக்கொண் டென்வலத்தில்,
மாறிலாய்! நிற்க வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார்.

## கஜேந்திர மோட்சம்.

காப்பு.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

1. பார்புகழ் கஜேந்தி ரன்தன் பரகதிக் கதையை யன்பால்
ஏர்தமிழ்க்கவியாற் சொல்ல என்னுளத் திருந்து காப்பாய்;
வார்திரைக் குதித்து வாளை வயல்தலை நாற்றில் பாயும்
சீர்மிகு குருகூர் மேவிச் சிந்துரத் தமர்ந்த தேவே!

நூல்.

2. செகதலத் தரச னாகச் செறிபரிச் சித்து ராசன்
சுகர்பதம் போற்றி செய்து தும்பியைப் பொருதுநின்ற
மகபல முதலை தன்னை வதைத்துவா ரணத்தை யன்று
ககபதி யூர்தி காத்த காரணஞ் சொல்லு மென்றான்.
3. மாயவ னருளி னாலே வகுத்திடும் உலகிற் கியாதி
வியாதமா முனிமுன் னாளில் விளம்பிய கதையைப் பாண்டு
சேயெனுந் தரும னுக்குச் செப்புநா ரதர்சொற் கேட்டு
நேயமா யானுஞ் சொல்வேன் நெறியுட னிருந்து கேண்மோ.

(பொன்மலை யாகிய மேருமலைக் கருகில் மூன்று சிகரங்களை யுடைய திரிகூடமலை யென்பதொன்றுண்டு. அம்மலையைச் சூழ்ந் துள்ள காட்டில்,)

4. கன்னல்ஆல் அத்தி பாலை காஞ்சிரம் இலுப்பை வேம்பு
புன்னைசாம் பிராணி வேங்கைபுன்குமந் தாரை மூங்கில்
வன்னிசண் பகம்ல வங்கம் மாகதம் வயிரம் ஆச்சா
தென்னுருத் திராக்க நல்லி தேக்குப்பா திரிப லாவும்.

5. அவ்வனந் தன்னி லேயொட் டகம்பரி யாளி சிங்கம்
கவ்விய வேங்கை யேனங் காடிமான் கலைக டம்பை
எவ்விடம் பார்க்கி லுங்கார் எருமையும் பசுவுஞ் சேவும்
ஒவ்விய கவிகள் மற்றும் உரைபல மிருக முண்டு.

6. சக்கர வாகப் புள்ளுஞ் சாதகஞ் சிகிச கோரம்
குக்குடந் தாரா அன்னங் கோகிலங் கிள்ளை காகம்
கொக்குடன் கல்வி நாரை கூளிபே ராந்தை கூகை
தக்கவல் லூறு டன்ரா சாளிபல் பறவை போகம்.

V.S. Narasimhan IV...

7. பலபல மிருக ஆர்ப்பும் பட்சிக ளார்ப்புஞ் சாயும்
சலதியி னார்ப்புந் தாரு தருசரு கார்ப்புஞ் சாலக்
கலைதெரி முனிவர் தேவர் கருடர்கந் தருவ ரார்ப்பும்
நிலையதாம் அதன்கு ணத்தை நிகழ்த்துதற் கருமை
யாமால்.

8. பூரண மாக நித்தம் பொழிமதது வனத்தி லுள்ள
வாரணக் குழவி விஞ்சி மதத்துமற் போர்செய் காலைத்
தாரணி நடுங்குஞ் சிங்கஞ் சார்த்தூலஞ் சர்ப்ப மிந்தக்
காரண மேதோ வென்று கலங்கியே வெருவி யோடும்.

9. பன்றியைத் தூக்கிப் பற்றிப் பாரினில் மோதும்; சின்ன
அன்றிலைப் பிடித்து வீசும்; மாங்களை யடித்துச் சாடும்;
குன்றினைக் குலுங்கத் தாக்கும்; குரங்கினைக் குகையிற் சேர்க்கும்:
மின்சிறைப் பறவை வானம் மேவியே பறக்கச் செய்யும்.

10. பாரிய சிங்கம் யாளி பயந்துதம் மலையி லேறும் ;
கீரிக ளுடும்பு பூனை கிண்டித்தம் வளையிற் செல்லும்;
வீரிய புலிபல் லூகம் வெகுண்டுதம் முழையி லேகும்
நீரினில் மகிடம் மூழ்கி நீந்தியே திரியு மன்றே.

11. கன்னலை முறித்து மெல்லும் ; கதலியின் கனியைத் தின்னும்;
செந்நெலைப் புசிக்கும்; துள்ளும்; செறிவிளாங் கனியைக் கொள்ளும் ;
அந்நிலை யானைக் கெல்லாம் அரசனு யிருக்கும் யானை
தன்னினம் பிரிந்து கோடி கரிணியோ டிருந்த தன்றே.

12. அல்லலோர் நாளி லேயும் அறிந்திடா அத்தந் திக்குத்
தொல்லைநாள் செய்த தீமை தொடர்ந்தநாள் இந்நாளாகி
எல்லையாம் வனத்தை விட்டு எண்ணிலாக் கரிணியோடு
மெல்லுநல் லுணவு தேடி மேய்ந்ததால் நெடிய தூரம்.

13. பங்கயப் பொய்கை தன்னைப் பார்த்துடன் பரிவாய்க்
கோடி
அங்கயக் கரிணி யோடவ் வாரியி னிழிந்து தங்கள்
அங்கமுங்குளிரத்தோய்ந்தாங்கருந்தியே தாகந்தீர்ந்து
பொங்கமாய்த் தும்பி ஈாசன் புதுமலர் கொய்யுங்காலே;

14. முன்பொரு சாபத் தால்கந் தருவனு முதலை யாகித்
தன்பெரும் பலத்தி னாலே சலத்திடை யிருந்து தந்திப்
பின்வருங் காலை நாடிப் பிடித்திட உதைக்க நொந்து
வன்பெருங் காவு மீண்டும் வந்துபின் தாளைக் கிட்டி,

15. பற்றியே யிழுக்கு மந்தப் பாரிய முதலை யின்வல்
நெற்றியைப் பிளப்ப னென்று நீண்டதன் துதிக்கை
யாலே
மொத்திடக் காவு நீரில் மூழ்கியே மேல்வந் தெய்தி
வெற்றிதோல் வியுமி லாமல் வெகுண்டுபோர் செய்
யுங் காலை.

16. கூடியே வந்து நின்ற கரிணிகள் கோடி தாமும்
வாடியே வெருவிச் சால மயங்கியே கரையி லேறி
நாடியே நோக்கி யின்று நாதனுக் கிந்தப் பாடு
தேடியே வந்தால் நம்மால் செய்வதென்? என்று கூறி.

17. ஆளனைப் பிரிந்து செல்ல அத்தியின் குழாங்கள் தங்கள்
தாளெழா தாக நின்று தயங்கியே யலறு மந்த
வேளையில் பற்றி நின்ற காவினை வீசி யின்னே
மீளுவ னென்று தந்தி மிகவலிந் தீர்க்குங் காலை;

18. கரையின்வாய் ஈர்க்குந் தந்தி காவுநீர் நடுவின் ஈர்க்கும்
வரையுடன் வரையெ திர்ந்து மற்பொரு வதுபோல்;
வாயில்

நரைபெற வொன்றுக்கொன்று நோக்கியே தாக்கி, அங்கம்
உரைபடத் தசைகள் சிந்த உதிரமும் பெருகவன்றே.

19. நாற்பெருந் திசையு மண்ணும் நடுங்கிட நாக ராசன்
ஆர்ப்பரித் துறுதி கொண்டங் கப்பினைக்கிழிய மோதிக்
கார்ப்பெருங் குன்று போலக்கடித்திடுங் காவைக்கண்டு
சூற்பெரும் பிண்டம் வீழப் புடைத்தது துதிக்கை யாலே.

20. விழும்; எழுந்திருக்கும் ; சீறும் ; மேலுமாய்க் கீழு மாகும் ;
சுழிபட நீரை யெல்லாந் துதிக்கையால் குழப்பும் ; மச்சக்
குழுவுடன் கடகஞ் சிப்பி கூர்மமண் டூக மெல்லாம்
பழுதிது வேதோ வென்று பயந்துபா தாளஞ் சேரும்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

21. தந்தி யும்நெடு நாள்க ராவுடன் தாக்கி யேசமர் செய்துளம்
நொந்து வாடியே நாலு திக்கையும் நோக்கி யேமன மேக்கமாய்
முந்து தானுறை வெற்பி டத்தையும் முறைமை செய்திடு முறைமையும்
எந்த நாளிலே காணு வேனினி யென்று பின்னுமி யம்புமால்.

22. சுரும்பு தேனைய ருந்தி யேசுரம் பாடி யாடிடுஞ் சோலையில்
கரும்பு செந்நெல்க தித்து றுங்கத லிப்ப லாநல காய்கனி

அரும்பு பூத்தளிர் முதலி யாவும ருந்தி யங்குறை
யாமல்நாம்
கருங்க ராவிட வாய கப்பட வந்த காரண மேதெனும்.

23. கன்றிக் கண்ணிரு திர்த்தி டும்பல காரி யங்கள்நி
னைத்திடும்;
குன்று போலவி ருந்த மேனியும் குன்றி டும்;மிக
வுங்குறைந்(து)
இன்று நாமினிச் செய்வ தென்னென ஏங்கி யேமன
மெலிவினல்
நின்றி டும்;தலை நாளி லேசெய்த நிந்தை யென்றுநி
னைந்திடும்.

24. நூறு பத்தவ ருடங்கள் போர்செய்து நொந்து வாடிய
குஞ்சரம்
பூரு வத்துள ஞானம் வந்துபொ ருந்தி யேவினை
போக்கிட
வேறு திக்கிலை யென்ற றிந்தது வேண்டி யேசரு
வேசனைக்
கூறி யேநெறி யைக்கொண் டேகரு ணத்தி னலேது
தித்திடும்.

25. உருவ மாகியும் அருவ மாகியும் ஒருமை யாகியும்
இருமையாய்
மருவ் மாகியும் மலரு மாகியும் மாத வத்தவர் மதுர
மாய்ப்
பெரிது மாகியும் சிறிது மாகியும் பேத மாகிய
பேதமாய்க்
குருவு மாயுப தேச மாகிய கோவே நீகதி யென்றிடும்.

26. மனமு மாகியும் மொழியு மாகியும் மருவி யேவன ரூபமாய்
இனனு மாகியும் சசியு மாகியும் எறிதி ரைக்கடல் மேருவாய்த்
தனய னாகியுந் தந்தை யாகியுந் தாயு மாகியுந் தருமமாய்
அனையு மாகிய பொருளெ னும்பர மான வாவப யம்மெனும்.

ஷ௸ வேறு.

27. தேனில்வீழ் ஈப்போல் வலைப்படு கயல்போல்
சிறுவர்கைப் பறவைசிக் குதல்போல்
கோனிலாப் படைபோல் மழையிலாப் பயிர்போல்
கொம்பிலாப் படர்கொடி யதுபோல்
கானகத் திருளின் முடவனூர் வதுபோல்
கலங்கியே காவிடை மெலிந்தேன்;
ஆனநின் னடிமைக் கடிமையாய் நீவந்
தபயமீந் தென்னையா ளனுமால்.

28. பூதலத் துதித்த நாளிது வரைக்கும்
பொய்வெரு வந்தநன் னயத்தின்,
வாதனைக் குள்ளாய் மயங்கினேன்; உனது
மலரடி வணங்கிடப் பெறலேன்;
தீதெனுங் கருமம் செய்யவே துணிந்தேன்;
செய்ததுன் செயலென அறியேன் ;
ஆதிநா யகனே! அஞ்சலென் றினியுன்
அபயமீந் தென்னையா ளனுமால்.

29. முற்பிறப் பதனில் செய்ததீ வினையின்
மும்மல வுடலெடுத் துலகில்
உற்பவித் தினிய கதிபெற உன்றன்
உண்மையி னுளவறி யாமல்

கற்பனை நிலையே! நிலைமையாய் நிகழும்
காலமும் வீணிலே கழித்தேன்;
அற்புதப் பொருளே! அஞ்சலென் றினியுன்
அபயமீந் தென்னையா ளெனுமால்.

ஷை வேறு.

30. கள்ள மாகியே யென்னை வந்துக டிந்து பற்றிய காவினைத்
தள்ளி யேவிட வேறு திக்கிலை தரும னே! இனித் தயைசெயாய்;
எள்ளி லேயுறை எண்ணெய் போலவீ ரேழு லோகமி சைந்துதான்
உள்ளு மாகிப்பு றம்பு மாகிய ஒருவ னே! அப யம் மெனும்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

31. உண்டென்பர் அடியார் பங்கில் உத்தம ரிடத்தி லேயும்
உண்டென்ப ரொருமை யான யோகிய ருளத்தி லேயும்
உண்டென்பர் சாது பக்கம்; உறுதிமெய் யுரையி டத்தும்
உண்டென்பர் அந்தத் தெய்வ முள்ளதோ இலையோ வென்னும்.

32. அந்தரந் தன்னை யானை யண்ணாந்து பார்த்துச் சொல்லும்
சிந்றனைக் காக்கத் திக்கா ரில்லையோ யிங்கே யாரும்
எந்தநே ரத்தி லீசன் வந்தெனைக் காப்பா னென்று
சிந்தனை பண்ணும்; எட்டுத் திசையினைத் திரும்பிப் பார்க்கும்.

33. இந்திரன் முனிவர் தேவர் இருடிஎண் திக்கு ளோரும்
சந்திரன் பரிதி முக்கண் சங்கர னயன்மற் றோரும்
அந்தர வீதி நின்று யானையின் முறையைக் கேட்டு
எந்தடை விதுக்குத் திக்கார் என்றுதாந் துயரின் நின்றார்.

34. இப்படிச் சுகருஞ் சொல்ல, இறைஞ்சிமன் னவன்ந கைத்து
மைப்படி கண்டன் வேதன் வாசவன் மற்று ளோரும்
எப்படிப் பார்க்க லுற்றார்? இடர் தொலைத் திபத்தைக் காக்கச்
செப்பமில் லாமல்நின்ற செய்தியையுரைமினென்றான்.

35. துங்கமா முனிவர் கேட்டுச் சுடர்முடி யரசை நோக்கிச்
சங்கையி லாம லத்தி தற்பரன் தனையே நாடி
எங்களை நினைத்த தில்லை யென்றயன் சிவன்மற் றோரும்
அங்ஙனே பார்த்தி ருந்தார் என்றுபின் அறைய லுற்றான்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

36. நித்தனாய், முனிக ளால்தொழுங் கடவு
ளாய், நிரா மயனுமாய், எவர்க்கும்
கத்தனாய்ப் பரம புருஷனாய்க், கருணா
கரனுமாய்க், கதியருள் தேவாய்ச்,
சுத்தனாய், விமல னாய்,வியா பகனாய்ச்,
சுருதிபா ராயண னுயும்,
அத்தனாய், உலோக நியாமக னானேன்
அவன்தனக் கபயமின் றெனுமால்.

37. இடிநிகர் காவால் கால்கா மோய்ந்து
ஏக்கமாய் உயிர்தடு மாறிப்
படிவமு முருகி வாலசை வற்றுப்
பரிவுட னாற்றுபே ரொலியால்
இடியனல் அப்பாய்க் கால்வெளி பூவாய்
எண்ணுமும் மூர்த்தியின் முதலாய்
அடிகளா மாதி மூலமே யெனுமம்
முறைஅரி செவிநுழை போழ்தே.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

38. பங்கயத் திருவைப் பாரான், பணிமுடி நிழலைத் தேடான்,
சங்குசக் கரமு மேந்தான்; தன்னெதிர் தொழுதுநிற்கும்
இங்கிதக் கருடன்மீதி லேறிடான்; இபத்தைக் காக்கக்
கங்கையைப் பெற்ற பாத சாரியாய்க் கடுகி வந்தான்.

39. துர்ச்சனர் கூடி நின்று தொடர்ந்தடி யாரைப் பற்றிப்
பச்சைமே னியனு முங்கள் பரமனெங் கேகாட் டென்று
மச்சரம் வைத்து மெத்த வாதைசெய் தாரோ? வென்றங் (கு)
அச்சுத னடைந்த போதில் அனைவரு மாலோ சித்தார்.

40. நாதனைப் பிரியா லட்சுமி நாயகி யுடுத்த சேலை
பாதிமுன் தானை யந்தப் பரமனுர் பற்றி யேகும்
போதுதான் நாமு மிந்தப் புதுமையை யறிது மென்று
மாதவன் பின்தொ டர்ந்து மயிலெனச்செல்ல லுற்றாள்.

41. முடியவிழ்கோசஞ்சோர, முகங்குறு வேர்வைகொள்ள,
அடியிணை குழைய, மெய்யி லணிமணி யார மாடக்,
கொடியிடை துவள, நீலக் கொண்டலின் மின்னல் போல
நெடியவன் பின்னெ ருங்கி நேரிழை நடக்க லுற்றாள்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

42. அந்த ரத்தொரீஇ யருகி னில்திரு அமர ரானோர்தொ டர்ந்திட,
நந்து வீறிடுந்தொனியதோ!பல நாயிருந்திகிரியுமதோ!
ஆந்த மாகிய கருட னும்மதோ! அனந்த னும்மதோ! நித்யவை
குந்தமேவிய பெயர்க ளும்மதோ! என்று நின்றுகைக் கூப்புவார்.

43. மாய னே!சர ணென்பர்; வாழ்திரு மார்ப னே! சர ணென்பரால்;
ஆய னே!சர ணென்பர்; அச்சுத! அமல னே! சர ணென்பரால்;
நேய னே!சர ணென்பர்; நான்மறை நிருப னேசர ணென்பரால்;
தூய னேசர ணென்பர்; சென்னியிற் சேர்த்தி ரண்டு கைக் கூப்புவார்.

44. வந்த தேவருங் கூடி நின்றுபல் லாண்டி சைத்துவந் தனஞ்செய
நந்த னும்மதுகொண்டிடாமலே நாகமேல்மன நாடியே

சிந்தை யாயதி வேக மாகவே செல்லும் போதவர் தம்
முடன்
பிந்தி முந்தியு மேக லுற்றனர் தேவர் மாமுனிபிரளயம்.

45. செங்கண் மாலுங டந்து வேகமாய்ச் செல்ல வேசெழுந்
தூ ரமாம்
பங்கயப்புனல் மேவு தும்பியின் பயம கன்றிடவாலுறை
செங்க திர்த்திரள் கோடி போலவே தேசு கொண்ட
வத் திகிரியை
மங்கை நாயக னேவி யேமுத்தி வந்து நின்றனன் கரை
யின் வாய்.

46. மண்ட லம்மிரு பிளவ தாகவு மாதி சங்களும் வெடிபட
விண்ட லங்கள்பி ளந்த தாகவு மேரு வும்மிக வுருகவே
குண்ட லஞ்சிர சுந்து ளங்கிடக் கும்பி யைப்பொரு
காவிரு
துண்ட மாகவே செய்து மீண்டரி கையி லாழியு
நின்றதே.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

47. சீதரன் சங்கந் தன்னைத் தொனித்தனன்; செவிடுபட்டு
வேதனிந் திரனீ சானன் விண்ணவர் மெய்ம்ம றந்து
சீதள சலதி மேரு சுழன்றுடன் தெளிவு கொண்டு
மாதவன் மீதி லன்று சொரிந்தனர் மலரின் மாரி.

48. அந்தரத் திடையின் பேரி யதிரவே முழங்குந் தேவ
துந்துபி சின்னங் காளஞ் சொல்வகைப் பல்லி யங்கள்
திந்திமி திமிதி மென்னத் தேவர்கள் செயசெ யென்ன
வந்தனன் செங்கண் மாலும் வாரணத் தருகி னன்று.

49. நீரிடை நெடிது நாளாய் நிலையற்று நின்ற யானை
பாரிய காவு மாளக் கண்டுதன் பயமகன்று
காரிய முடிக்க விங்குக் காரண மாக வந்த
சீரிய திருமால் தன்னை நோக்கியே சிரசை யாட்டும்.

50. ஆடிய சிரசின் மீதில் அரிமலர்க் கையை வைத்து
வாடினை துயர மெய்தி மனமொரு மித்து நம்மை
நாடினை; யினியோர் நாளும் நாசமே வாரா தென்று
நீடிய வுடலைக் கையால் தடவினன் நெடிய மாலும்.

51. தடவிய அரியின் கையைத் தந்தியுந் தன்கைந் நீட்டி
அடைவுடன் மோந்து கொண்டங் களவிலாப் புளக மாகிக்
கடவுளின் கருணை யாலோங் காரமே செய்து நின்ற
உடனேமுன் னாளி லுள்ள உருவினைக் கொண்ட தன்றே.

52. சுரர்பதி யான யற்குந் துதிக்கவும் வணங்க வெட்டா
அரிதனை வலமாய் வந்தே அஞ்சலித் தெதிரில் நின்று
திருமக ளுறையு மார்புந் தேசுலா முகமு நோக்கிப்
பரிபவ குணங்க ளெல்லாம் பத்தியாய்த் துதிக்க லுற்றான்.

53. பண்டுநான் செய்த பாவம் பகடெனப் பெயரைத் தாங்கிக்
கண்டமா விலங்குக் கெல்லாம் காலனென் றுரைப்ப தாகக்
கண்டகத் துறையு மிந்தக் கண்டகன் தன்மே லன்பும்
உண்டெனு மொழிவி ளங்க வுகந்துநீ வந்த தன்றே.

54. ஈசனே! தேவர்க் கெல்லாம் இறைவனே! திகழ்வை குந்த
வாசனே! அடியார்க் கென்றும் வரதனே! அனந்த வெய்யோர்
தேசுள வடிவே! உன்னைச் சிந்தையில் தரிசிப் போர்க்கு
மாசிலாப் பதவி நல்கும் மாயனே! சரண மென்றே.

55. இறைஞ்சியே நின்ற விந்தி ரத்துய்மன் தனையே நோக் கித்
துறந்தனை தீமை யெல்லாஞ் சுகமினிப் பெறுவா யென்று
அறந்திரு நாதன் சொல்ல, அரசனு மரிரூ பான
நிறந்தனை யெய்தி மோட்ச நிலையது பெற்ற வாறே.

56. கரவெனு முருவ மாறிக் கந்தர்வ வடிவ மாகிப்
பரமனை வணங்கி யேத்தி யலர்மகள் பாதஞ் சேர்ந்து
திரமெனுங் கீதம் பாடித் தேவர்கள் வாழு கின்ற
புரநிலை யாகப் பெற்றுப் போயினன் ஊகூ வென்பான்.

57. சங்கத்தைத் தொனித்துத் தேவ தேவனுஞ் சார்ங்க பாணி
இங்கித மாகச் சென்றான் இணையில்வை குந்தத் திற்கு
சங்கரன் அயன்மற் றோரும் அவரவர் தானஞ் சேர்ந் தார்;
பொங்கமாய்ச் சுகரீ தெல்லாம் புகன்றனர் பரீச்சித் துக்கே.

58. தேவர்கள் வாழி; எட்டுத் திசையிலுள் ளோர்கள் வாழி;
மூவரும் வாழி; ஆதி மூலமும் வாழி; இந்தப்

பூவுல கெங்கும் வாழி; பொதுவர்தங் குலமும் வாழி;
யாவரும் வாழி வாழி; அறமது சயமாய் வாழி.

திருவடி தாசர்.



## திரிகடுகம்.



### வெண்பா.

1. மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும், மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானும்,—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானும், இம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்.

2. ஆசை பிறன்கண் படுதலும், பாசம்
பசிப்ப மடியைக் கொளலும்,—கதித்தொருவன்
கல்லானென் றெள்ளப் படுதலும், இம்மூன்றும்
எல்லார்க்கும் இன்னா தன.

3. உண்பொழுது நீராடி யுண்டலும், என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்,—தோல்வற்றிச்
சாயினும் சான்றாண்மை குன்றாமை, இம்மூன்றும்
தூஉய மென்பார் தொழில்.

4. தன்னச்சிச் சென்றாரை யெள்ளா வொருவனும்,
மன்னிய செல்வத்துட் பொச்சாப்பு நீத்தானும்,
என்றும் அழுக்கா றிகந்தானும், இம்மூவர்
நின்ற புகழுடை யார்.

5. தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும், இம்மூன்றும்
செல்வ முடைக்கும் படை.

6. வைததனை யின்சொல்லாக் கொள்வானும், நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்,—ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும், இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.

7. கிளைஞர்க் குதவாதான் செல்வமும், பைங்கூழ்
விளைவின்கண் போற்றாதான் உழவும்,—இளையனுய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும், இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும்.

8. நிறைநெஞ் சுடையானை நல்குர வஞ்சும்;
அறனை நினைப்பானை அல்பொரு ளஞ்சும்;
மறவனை யெய்வுயிரு மஞ்சும்; இம்மூன்றும்
திறவதில் தீர்ந்த பொருள்.

9. அருளினை நெஞ்சத் தடைகொடா தானும்,
பொருளினைத் துவ்வான் புதைத்துவைப் பானும்,
இறந்தின்னு சொல்லகிற் பானும், இம்மூவர்
பிறந்தும் பிறந்திலா தார்.

10. கற்றாரைக் கைவிட்டு வாழ்தலும், காமுற்ற
பெட்டாங்கு செய்தொழுகும் பேதையும்,—முட்டின்றி
அல்லவை செய்யும் அலவலையும், இம்மூவர்
நல்லுலகஞ் சேரா தவர்.

## நான்மணிக் கடிகை.



### வெண்பா.

1. கள்ளி வயிற்றி னகில்பிறக்கும்; மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம் பிறக்கும்;—பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும்; அறிவார்யார்?
நல்லாள் பிறக்குங் குடி.

2. கந்திற் பிணிப்பர் களிற்றை; கதந்தவிர
மந்திரத் தாற்பிணிப்பர் மாநாகம்;—கொந்தி
இரும்பிற் பிணிப்பர் கயத்தை; சான்றோரை
நயத்திற் பிணித்து விடல்.

3. கன்றாமை வேண்டுங் கடிய; பிறர்செய்த
நன்றியைக் கொல்லாக் கொளல்வேண்டும்;—என்றும்
விடல்வேண்டுந் தங்கண் வெகுளி; அடல்வேண்டும்
ஆக்கஞ் சிதைக்கும் வினை.

4. பறைநன்று பண்ணமையா யாழின்; நிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரின்;—பண்ணழிந்து
ஆர்தலின் நன்று பசித்தல்; பசைந்தாரின்
தீர்தலின் தீப்புகுதல் நன்று.

5. மொய்சிதைக்கும் ஒற்றுமை யின்மை; ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலு மேனியை;—பெய்த
கலஞ்சிதைக்கும் பாலின் சுவையை; குலஞ்சிதைக்கும்
கூடார்கண் கூடி விடின்.

6. திரியழல் காணின் தொழுவ; விறகின்
எரியழல் காணி னிகழ்வ;—ஒருகுடியில்

கல்லாது மூத்தானைக் கைவிடுவ; கற்றான்
இளமைபா ராட்டு முலகு.

7. கைத்திலார் நல்லவர் கைத்துண்டாக் காப்பாரின்;
வைத்தாரின் நல்லர் வறியவர்;—பைத்தெழுந்து
வைதாரின் நல்லர் பொறுப்பவர்; செய்தாரின்
நல்லர் சிதையா தவர்.

8. சாவாத தில்லை பிறந்த வுயிரெல்லாம்;
தாவாத தில்லை வலிகளும்;—மூவா(து)
இளமை யியைந்தாரு மில்லை; வளமையில்
கேடின்றிச் சென்றாரு மில்.

9. இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்;
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்;
கிளைஞரில் போழ்தில் சினங்குற்றம்; குற்றம்
தமரல்லார் கைத்துள்ள தூண்.

10. மனைக்கு விளக்க மடவார்; மடவார்
தமக்குத் தகைசால் புதல்வர்;—மனக்கினிய
காதல் புதல்வர்க்குக் கல்வியே; கல்விக்கும்
ஓதில் புகழ்சா லுணர்வு.



## தண்டலையார் சதகம்.



### அறுசீர் ஆசிரிய விருத்தம்.

1. நன்றிதரு பிள்ளையொன்று பெற்றாலுங் குலமுழுதும்
நன்மை யுண்டாம்;
அன்றியறி வில்லாத பிள்ளையொரு நூறுபெற்று மாவ
தூண்டோ?
மன்றில்நடம்புரிவாரே! தண்டலையா ரே!சொன்னேன்
வருடந் தோறும்
பன்றிபல வீன்றுமென்ன? குஞ்சரமொன் றீன்றதனால்
பலனுண் டாமே,

2. துப்பிட்ட ஆலம்விதை சிறிதெனினும் பெரிதாகுந்
தோற்றம் போலச்
செப்பிட்ட தினையளவு செய்தநன்றி பனையளவாய்ச்
சிறந்து தோன்றும்;
கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார் வளநாட்டில்
கொஞ்ச மேனும்
உப்பிட்ட பேர்கள்தமை யுளவரையும் நினைக்குமிந்த
உலகந் தானே.

3. சங்கையறப் படித்தாலும் கேட்டாலும், பிறர்க்குறுதி
தனைச்சொன் னாலும்
அங்கனல கிற்சிறியோர் தாமடங்கி நடந்துகதி
யடைய மாட்டார்;

திங்களணிசடையாரே! தண்டலையா ரே!சொன்னேன் சிறிது காலம்
கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரைக்காய் நல்ல கரைக் காயா காதே.

4. ஓதரிய தண்டலையா ரடிபணிந்து நல்லவனென் றுலக மெல்லாம்
போதமிகும்பேருடனே புகழ்படைத்து வாழ்பவனே புருட னல்லால்
ஈதலுட னிரக்கமின்றிப் பொன்காத்த பூதமென விருந்தா லென்ன?
காதவழி பேரில்லான் கழுதையோ டொக்குமெனக் காண லாமே.

5 காதிலே திருவேடங் கையிலே செபமாலை கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கள் மனதிலே காவடமாம் வேட மாமோ?
வாதிலே யயன்தேடுந் தண்டலைநீள் நெறியாரே! மனிதர் காணும்
போதிலே மவுனம்;இராப் போதிலே ருத்ராக்கப் பூனை தானே.

6. நாற்கவியும் புகழவரும் தண்டலையார் வளநாட்டில் நல்ல நீதி
மார்க்கமுடன் நடந்து செங்கோல் வழுவாமல் புவியா ளும் வண்மை செய்த

தீர்க்கமுள்ள வாசனையே தெய்வமென்பார்; கொடுங்
கோன்மை செலுத்தி நின்ற
மூர்க்கமுள்ள வாசனுந்தன் மந்திரியு மாழ்நாகின்
மூழ்கு வாரே.

7. நேற்றுள்ளா ரின்றிருக்கை நிச்சயமோ? ஆதலால்
நினைத்த போதே
ஊற்றுள்ள பொருளுதவி யறந்தேடி வைப்பதறி
வுடமை யன்றோ?
கூற்றுள்ள மலையவருந் தண்டலையா ரே! சொன்னேன்
குடபால் வீசும்
காற்றுள்ள போதெவருந் தூற்றிக்கொள் வதுநல்ல
கருமந் தானே.

8. வைதிடினும் வாழ்த்திடினும் இன்பதுன்பம் வந்திடி
னும் வம்பு கோடி
செய்திடினுந் தண்டலைநீள் நெறியார்தஞ் செய
லென்றே தெளிவ தல்லால்,
மெய்தவிர அவர்செய்தா ரிவர்செய்தா ரெனநாடி
வெறுக்க லாமோ?
எய்தவர்தம் அருகிருக்க அம்பைநொந்த கருமமென்ன?
வியம்பு வீரே.

9. துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலும், மறந்து
விட்டுத் துடுக்கே செய்வார்;
சன்மார்க்கர்க் கொருவார்த்தை சொலுமளவே மெய்ய
தனில் தழும்பாக் கொள்வார்;

பன்மார்க்க மறைபுகழுந் தண்டலையா ரே! சொன்
னேன்; பதமே யான
நன்மாட்டிற் கோரடியாம் நற்பெண்டிர்க் கொரு
வார்த்தை நடத்தை யாமே.

10. விற்பனர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக் கண்ணோ
ட்ட மிகவுஞ் செய்வார்;
சொற்பருக்கு வாழ்வுவந்தால் கண்டெரியா திறுமாந்து
துன்பஞ் செய்வார்;
பற்பலர்க்கு வாழ்வுதருந் தண்டலையா ரே! சொன்
னேன்; பண்பில் லாத
அற்பருக்கு வாழ்வுவந்தா லர்த்தராத் திரிகுடைமே
லாகுந் தானே.

11. நேசமுடன் சபையில்வந்தால் வேளையறிந் திங்கிதமா
நிருபர் முன்னே
பேசுவதே யுசிதமல்லால் நடுவிலொரு வன்குழறிப்
பேச லெல்லாம்
வாசமிகுந் தண்டலைநீள் நெறியாரே! அபிஷேக மவிநீ
ராட்டிப்
பூசைபண் ணும்வேளையிலே காடியைவிட் டோட்டுவது
போலுந் தானே.

12. மண் ணுலகில் பிறர்குடியை வஞ்சனையிற் கெடுப்பதற்கு
மனத்தி னாலே
உன்னிடினு முரைத்திடினு மவன்தானே கெடுவனெ
ன்ப துண்மை யன்றோ?

தென்னவன்சோழன்பணியுந் தண்டலைநீள் நெறி
யாரே! தெரிந்து செய்யும்
தன்வினைதன் னைச்சுடவோட் டப்பம்வீட் டைச்
சுடவுந் தான்கண் டோமே.

13. நித்தமெழு நூறுநன்றி செய்தாலு மொருதீது நேரே
வந்தால்
அத்தனையுந் தீதென்பார், பழிகருமக் கயவர்குண மக
ற்ற லாமே?
வித்தகஞ்சேர் தண்டலையார் வளநாட்டில் சாம்பலிட்டு
விளக்கி னாலும்
எத்தனைசெய் தாலுமென்ன? பித்தளைக்குத் தன்நாற்ற
மியற்கை யாமே.

படிக்காசுப் புலவர்.



## தனிப் பாடல்கள்.



### வெண்டா மரையாள் மாலை.

### கட்டளைக் கலித்துறை.

1. ஆக்குந் தொழிற்கிறையோனெழில்நாவினமர்ந்தருள் நீ
தாக்குங் கொடுவினை யேன்தா லதனிடைச் சார்ந்து
நின்கண்
நோக்குங் குவலயப் பாவாணர் வேண்டு நாவலரிய
வாக்கு மளித்தெனை யாண்டருள் வெண்டா மரை
யன்னமே.

2. அறையும றம்பொரு ளின்பமும் வீடு மனைத்து மெய்தும்
உறையுஞ்சினமழுக் காறுவெந்தீமையொ ழிந்திடுமால்;
தறையிடை நின்னரு ளொன்றே பலித்திடில் சால்புறு நான்
மறைதூ புரமாற் றும்பாத வெண்டா மரையன்னமே.

3. நானே விரும்பி நயந்துனே யேத்தில னுயினுநீ
தானே விரும்பி யெனையாண் டனையித் தராதலத்தே
வானே யியற்று முதவியை வைய மறந்திடுமோ?
மானேர் விழியாய்! சததள வெண்டா மரையன்னமே.

ஆ. வீ. க.



## முடி சூட்டு வாழ்த்து.



### ஏழாம் எட்வர்ட் சக்ரவர்த்தி யவர்கள் முடி சூடிய பொழுது பாடியது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

4. சீரார் பதுமத்திருமகளுஞ்செய்யோர்நாவிலுறைமகளும்
நீரார் கடல்சூழ் நிலமகளும் நிலவச் செங்கோல் கைக் கொண்டார்;
போரார்எழா மெட்வர்ட்டாம்பேசற் கரிய மன்னவரால்
ஏரார்செஞ்சொற் புலவீர்காள்! இனிது புகழ வாரீரே.

5. புகழின்மிக்க மாராணி புரிந்த தவத்தின் வந்தவரால்;
இகழ்வில் நீதி மன்னவிசை இலகு செங்கோல் கைக் கொண்டார்;

மகிழ்வி னேமுா மெட்வர்ட்டாம் மன்னர் மன்ன ரவர்
சீர்த்தி
திகழும் வண்சொற்புலவீர்காள்! தேர்ந்து புகழ வாரீரே.

6. மாற்ருர் முதுகுந் தமையடைந்தோர் மலர்போல் முக
முங் காண்பவரால்;
நாற்ரேள் மறைத்தே யிருதோளின் நலஞ்சேர் புவி
யின் வந்தனரால்;
ஊற்ருய்ப் பெருகுந் திருக்கருணை யுளத்தார் எழாம்
எட்வர்ட்டை
நோற்றே பெற்ருேம் அரசரென நொய்யோர் தம்மால்
துயரிலமே.
கா. ர. கோ.

யானையைப் பரிசிலாகக் கொடுத்த இராமனென்பனைப்
புகழ்ந்தது.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

7. இம்பர்வா னெல்லையிரா மனையே பாடி
என்கொணர்ந்தாய்? பாணு! நீ யென்ருள் பாணி;
வம்பதாங் களபமென்றேன் பூசு மென்ருள்;
மாதங்க மென்றேன்யாம் வாழ்ந்தோ மென்ருள்;
பம்புசீர் வேழமென்றேன் தின்னு மென்ருள்;
பகடென்றேன் உழுமென்ருள் பழனந் தன்னை
கம்பமா வென்றேன்நற் களியா மென்ருள்;
கைம்மாவென் றேன்சும்மா கலங்கி ஞளே.

கட்டுச் சோற்றைப் பறிகொடுத்த போது பாடியது.

கட்டளைக் கலித்துறை.

8. சீராடை யற்ற வைரவன் வாகனஞ் சேரவந்து
பாராருநான்முகன்வாகனந்தன்னைமுன் பற்றிக்கௌவி
நாரா யணனுயர் வாகன மாயிற்று நம்மைமுகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றினில் பற்றினனே.

அந்தகக்கவி-வீரராகவ முதலியார்.

திருமயிலை வேங்கடசாமி என்னும் பிரபுவின் மீது பாடியது.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

9. மூங்கிலிலே போயொளித்தான் முக்கண் சாமி;
முதியகடல் போய்ப்படுத்தான் முகுந்த சாமி;
தாங்கமலப் பொகுட்டுறைந்தான் தலைநாற் சாமி!
தடவரையி லுழன்றுநின்றான் தகப்பன் சாமி;
வாங்கியுண்ண வழிகாத்தான் வயிற்றுச் சாமி;
வாணருக்கிங் குதவுவரார் ? மற்றோர் சாமி;
ஓங்கியசீர் மயிலையில்பொன் னப்ப சாமி;
உதவியவேங் கடராய உசித வேளே !

தன்குற்றத்திற் கிரங்கிப் பாடியது.

10. கல்லாத வொருவனையான் கற்றா யென்றேன்;
காடெறியு மறவனைநா டாள்வா யென்றேன்;
பொல்லாத வொருவனைநான் நல்லா யென்றேன்;
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்;
மல்லாரும் புயமென்றேன் சூம்பல் தோளை ;
வழங்காத கையனைநான் வள்ள லென்றேன் ;
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான் ;
யானுமென்றன் குற்றத்தா லேகின் றேனே.

சிவபெருமான் தன்னினும் அதிக துன்பமுடையவ ரெனல்.

11. வஞ்சகர்பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்,
வாசல்தொறும் முட்டுண்ட தலையிற் புண்ணும்,
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற் புண்ணும்,
திருமென்றே சங்கரன்பால் சேர்ந்தே னப்பா!
கொஞ்சமல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலா லுதைத்தபுண்ணும் கோப மாகப்
பஞ்சவரி லொருவன்வில்லா லடித்த புண்ணும்
பாரென்றே காட்டிநின்றான் பரமன் தானே.

இராம சந்திரக் கவிராயர்.

கவித்திறம்.

நேரிசை வெண்பா.

12. வெங்காயஞ் சுக்கானால் வெந்தயத்தா லாவதென்ன?
இங்கார் சுமந்திருப்பா ரிச்சரக்கை?—மங்காத
சீரகத்தைத் தந்தீரேல், தேடேன் பெருங்காயம்;
ஏரகத்துச் செட்டியா ரே!

சோக்கநாதப் புலவர்.

உயர்ந்த ஆடையில்லாதார் உலகத்தில் மதிக்கப் படாரென்பது.

13. மேலாடை யின்றிச் சபைபுகுந் தாலிந்த மேதினியோர்
நூலா யிரம்படித் தால்மதி யார்; நுவல் பாற்கடலோ
மாலா னவரணி பொன்னுடைகண்டு மகளைத்தந்தே
ஆலால மீந்தது தோலாடை சுற்றுமவ் வான்தனக்கே.

நையாண்டிப் புலவர்.

## இரங்கற் பாக்கள்

அந்தகக்கவி வீரராகவ முதலியார் மரித்தபோது
அவர் மாணவர்களி லொருவர் பாடியது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

14. முன்னாட்டுத் தவமுனியுஞ் சேடனும்வான் மீகனும் உன் முன்னில் லாமல்
தென்னாட்டு மலையிடத்தும் பாரிடத்தும் புற்றிடத்துஞ் சென்று சேர்ந்தார்.
இந்நாட்டுப் புலவருனக் கெதிரிலையே; கவிவீர ராக வா! நீ
பொன்னாட்டுப் புலவருடன் வாதுசெயப் போயினையோ? புகலுவாயே.

சீதக்காதி என்னும் ஒரு பிரபு இறந்தபோது பாடியது.

கட்டளைக் கலித்துறை.

15. பூமா திருந்தென்? புவிமா திருந்தென்ன? பூதலத்தில்
நாமா திருந்தென்ன? நாமிருந் தென்ன? நல் நாவலர்க்குக்
கோமா னழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமா னிறந்திட்ட போதே புலமையுஞ் செத்ததுவே.

நமசிவாயப் புலவர்.

இராமசந்திரக் கவிராயர் இறந்தபோது பாடியது.

கட்டளைக் கலித்துறை.

16. செந்தமிழ்ச் செல்வனு மோரா யிரந்தலைச் சேடனும்யாழ்ச்
சுந்தரத் தோடிசை வல்லானும் யாவருந் தோத்திரஞ் செய்

கந்தனைச்சொல்லுங் கவிராமச்சந்த்ரனைக் கண்டுவெட்கி
அந்தரம் வெற்பிழி பாதாளத் தோடி யடங்கினரே.

எல்லீசு துரை.

கூவத்து நாராயணன் இறந்தபோது பாடியது.

நேரிசை வெண்பா.

17. இடுவோர் சிறிதிங் கிரப்போர் பெரிது ;
கெடுவாய் நமனே! கெடுவாய்—படுபாவி
கூவத்து நாரணனைக் கொன்றாயே! கற்பகப்பூங்
காவெட்ட லாமோ? கரிக்கு.

ஒப்பிலாமணிப் புலவர்.



## சீட்டுக் கவி.



ஆசிரிய விருத்தம்.

18. கல்விச் சமுத்திரம்; கமலா லயம்; தமிழ்க்
கடல்மடைதி றந்த வெள்ளம் ;
கற்பனை பிறப்பிடம்; கலைமக ளிருப்பிடம் ;
கவிமாரி பொழியு மேகம் ;
சொல்விற் பனம்விளையு மதுரக் களஞ்சியம் ;
தோன்றுகற் பூர தீபம் ;
சுகிர்தகுண வததானி, சாவணப் பெருமாள்கைத்
தொட்டெழுதி விட்ட சனது
வில்லுக் கருச்சுனன் ; சொல்லுக் கரிச்சந்திரன் ;
வெற்றிக்கு விக்ர மார்க்கன் ;
வித்தைக் ககத்தியன் ; முத்துக் கருப்பண்ண
விலட்சண னெதிர்ந்து காண்க.

மல்வெற்றி யாயென்று தாயென்று நீயென்று
மாலென்று வேலென்று கா
மாவென்று காவென்று நாவொன்று பாவொன்று
வருகின்ற தருள் புரிகவே.



## குறிப்புரை.



### காப்பு.

1. சேமம்—இருப்பிடம்; செய்ய—அழகிய; தாமம்—மாலை; துளவு—துளசி; வகுளம்—மகிழம்பூ; பராங்குசன்—நம்மாழ்வார்; நாரணன்—திருமால்; நாராயணனே நம்மாழ்வாராக அவதரித்தன னென்பது கருத்து.

2. ஒன்றான் — பொருந்ாதவன்; அம்+சரணம் + ஊன் றானை—அழகிய (தனது) பாதங்களைப் பதியாதவனை; மறை—வேதங்கள்; நால் வாயான்—தொங்குகின்ற வாயை யுடையவன்; அத்தன்—கடவுள்; துஞ்சு அவுணர்—மயங்கும் அரக்கர்; அஞ்சான்—பயப் படாதவன்; சென்னி+அணி+ஆறான்—தலையிலணிந்த நதியை யுடையவன்; துகள் எழான்—குற்ற மில்லாதவன்; எட்டானை—அறியப் படாதவனை; கற்பகம்—கற்பக விநாயகர்; சிந்தை செய்வாம்—துதிப்போம்.

இதில் ஒன்றானை, இரண்டானை, மூன்றானை, நாலானை, அஞ்சானை, ஆறானை, எழானை, எட்டானை யென ஒன்று முதல் எட்டு எண்கள் இன்பந்தோன்றுமாறு அமைந்துள்ளமை காண்க.

### திருவரங்கக் கலம்பகம்.

இத்னை யியற்றினவர் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் என்பவர். ஒருநாள் இவர் தாமிருந்த ராஜ சபையின் நடுவில் தமது வஸ்திரத்தைப் பற்றி "கிருஷ்ண! கிருஷ்ண"வென இரு கரங்களாலுந் தேய்த்தனர். அப்போது சுற்றிலுமுள்ளவர் இவரை

நோக்கி "தாங்க ளிவ்வாறு செய்யக் காரணம் யாது? என்றனர். அதற்கவர், ஸ்ரீரங்கத்தில் இன்று நம்பெருமாளுக்கு ரதோற்சவம் நடக்கிறது; அகஸ்மாத்தாய்த் திரைச்சீலையில் தீப்பற்றிக் கொள்ள அதனை யணைத்தேன்" என்றனர். இச்செய்தி அவ்வரசனுக் கெட்டியதும், அவன் இவ்வுண்மையைக் கண்டறிந்து இவரைத் தமது வுழியத்தினின்றும் விலக்கி, இவர் விரும்பியவண்ணம் இவர்வசிப்பதன்பொருட்டு இவர்க்குத் திருவரங்கத்தில் மண்டபமொன்றை யமைத்துக் கொடுத்து, இவர்க்கு வேண்டிய உணவு முதலியவற்றையுங் குறைவின்றிநடத்திவந்தான். அதன்பின்பு, ஐயங்கார் அஷ்டப் பிரபந்த மென்னும் நூலையியற்றின ரென்பார்.

திரு வரங்கக் கலம்பகம்:—இது ஐயங்கா ரியற்றிய எட்டுப் பிரபந்தகளுள் ஒன்று. மற்றைய வேழாவன:—(1) நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி (2) திருவேங்கடமாலை (3) திருவேங்கடத்தந்தாதி (4) அழகரந்தாதி (5) திருவரங்கத் தந்தாதி (6) திருவரங்கத்து மாலை. (7) சீரங்க நாயக ரூசல் என்பன. மேகவிடு தூது, பரப்பிரம விவேகம் முதலிய வேறுசில நூல்களையும் இவரியற்றினரென்பார்.

## திருமால் துதி.

3. மருவு—பொருந்திய; எந்தை—என் தந்தை; இதுமரூஉ; குரு—ஆசாரியன்; அஞ்ஞானத்தைப் போக்குவோ னென்பது; மருள்—அஞ்ஞானம்: தஞ்சம்—ஆதாரம்; வானம்—பரமபதம்; திரு அரங்கனூர்—ஸ்ரீரங்கத்தை இருப்பிடமாக வுடையவர்; இருவர் அங்கனூர்—சிவன், பிரமன் ஆகிய இருவரையும் (தமது) தேகத்திலுடையவர்; மாயன்;—ஆச்சரியகரமான குணங்களையும் செயல்களையு முடையவன்; ஆயன்—கண்ணன்; முகுந்தன்—திருமால்; இம்மை மறுமை யின்பங்களை யளிப்பவனென்பது. அமல நாதன் பரிசுத்தமாகிய தலைவன்; கமல பாதம்-தாமரை மலரைப்போன்ற பாதங்கள். எமக்குப் பிதா, குரு முதலிய எல்லாம் திருவரங்கனது திருவடிகளே என்பது கருத்து; மருவு தந்தை—தன்னைப்பெற்ற

பிதா; எந்தை—யாவர்க்கும் பரம பிதாவாய் விளங்கும் பர மேஸ்வரன்.

4. புலே—இழிவு; பொன்னி—காவிரியாறு; கொழிக்கும்—(கரையில்) ஒதுக்கும்; ஆர்—பொருந்திய; பிரான்—நம்பெருமாள். அன்னே—(உலகத்துக்கு) தாயாகிய சீதா பிராட்டி; தொலேயாத கானம்—கடக்க முடியாத காடு. தடம் தோறும்—(அவர் நடந்து சென்ற) இடங்களிலெல்லாம்; கழல்—பாதம்; தானியாகு பெயர். சிலே—கல்.

5. கானிலுறைந்து—காட்டில் வாசஞ் செய்து, கதி தேடி—நற்கதி (யடைய) விரும்பி; தீயிடை—பஞ்சாக்கினி மத்தியில்; பூவலம்—பூப்பிரதக்ஷணம்; பூமகள் நண்பன்—செந்தாமரையில் வசிக்கும் திருமகளுக்குக் கணவன்; தட நாகம் பாயல்—பெரிய ஆதிசேஷ னென்னும் படுக்கை: கோயில் அரங்கம்—திருவரங்கம் பெரிய கோயில்; அரங்கம்—இரண்டாறுகளுக்கு நடுவிலுள்ள விடம்; பணிவீர்—வணங்குவீர்.

6. சென்னி—தலே; இறைஞ்சிடுக—வணங்குக; இணர்—பூங்கொத்து; காயாம் பூ வண்ணன்—காயம்பூப் போன்ற நிற முடையவன்.

7. இருள்—இரவு; வெளி—பகல்; மருள்—அஞ்ஞானம்; தெருள்—ஞானம்; மிடையினும்—நெருங்கி வருத்திஞலும்; ஊன்—மாமிசம்; இங்குக் காரணவாகு பெயராய் உடம்பை யுணர்த்திற்று; சுருதி—வேதங்கள்; ஓலிடும்—புகழும்; ஓலம் என்பது கடைக்குறைந்து ஓலென நின்றது; கரதலம்—கைகள்; துவளும்—அசையும்; மூரல்—புன்னகை; சுருள் கரும் கேசம்—சுருண்ட கரியசிகை; செய்ய நீள் முடி—அழகிய நீண்ட மகுடம்; துய்ய சேவடி—பரிசுத்த மாகிய சிவந்த பாதங்கள்.

8. வேலே—கடல்; வேலே—தொழில்; மாலே—திருமாலே; மாலே—மாலேக்காலம்; உன்னி நைந்தோம் இல்லே—தியானித்து (மனம்) தளரப் பெற்றேமில்லே.

9. மேவி கிடந்தானே—பொருந்திச் சயனித்திருப்பவனே ; வீற இருக்கும்—சிறப்போடிருக்கும்; ஆவி—உயிர்.

10. வடியாத பவம் கடல்—வற்றாத பிறவியாகிய கடல்; மூல மாயை கடந்து—மூலப்பிரகிருதியென்னும் மாயையைத் தாண்டி; குழாம்—கூட்டம்; மணி மாடம்—அழகிய மாளிகைகள்; மூதூர்—பழைய ஊர் ; நெடியோனே—யாவரினும் உயர்ந்தவனே ! இது திரிவிக்கிர மாவதாரத்தைக் குறிக்கும். நீசன்—அற்பன்.

## வில்லிபுத்தூர் ஆழ்வார்

இவர் பாரதத்தைத் தமிழிலியற்றினவர். இவர் திருமுனைப் பாடியில் சனியூரில் அந்தண குலத்தில் உதித்தனர். இவர் அருண கிரி நாதருடன் நிகழ்த்திய வாதத்தில் தோல்வியுற்றன ரென்பார் சிலர்; அதனை மறுத்துரைப்பார் வேறுசிலர். இவர் வைஷ்ணவரென் பது வெளிப்படை. இவர் சுமார் 600 வருடங்கட்கு முற்பட்டவ ரென்பார். இவர் வேறு நூல்களியற்றியதாய்த் தெரியவில்லை.

இவரைத் தவிரப் பெருந்தேவனார்,நல்லாப்பிள்ளை யென்னும் வேறு இருவர் பாரதத்தைத் தமிழ்ப் படுத்தினர்.

11. அருமறை—சிறந்த வேதங்கள்; ஆழி—சக்ரம்; முகில்—மேகம்; கமலம்—தாமரை; தேவ தேவன் —தேவர்களுக்குத் தேவன்; மேலான தேவனென்பது. முளரி—தாமரை; இறைஞ்சி யேத்துவாம்—வணங்கித் துதிப்போம்.

12. தாள்—பாதம்; சகடு இற—சக்ரத்தின் வடிவமாய் வந்த அசுரனழிய; பாம்பு--காளிங்க னென்னும் நாகம்.

13. தவமுனி—விஸ்வாமித்திரன் ; மெய்—உடம்பு ; ஆவம் அம்பறாத்தூணி; வெம் சரம்—கொடிய அம்புகள்; மை ஆழி முகில் வண்ணன்—கரிய கடலினின்றெழும் மேகம்போன்ற (கரிய) நிற முடைய ஸ்ரீராமன்; (கரிய) மையையும் கடலையும் மேகத்தையும் போன்ற நிறமுள்ளவ னெனினுமாம். பூ கமலம் கையால்—அழகிய தாமரை மலர் போன்ற கைகளால், ஒரு சாபம்—ஒப்பற்ற(சிவ

பிரானது) வில்லே, வாங்கியது—வளைத்ததாம்; காலாலும்—பாதத்தாலும், ஒரு சாபம்—ஒப்பற்ற (அகலிகையின்) சாபத்தை, வாங்கியது—ஒழித்ததாம்; வாங்கியன—செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை; கையாலு மொருசாபம், காலாலு மொரு மென இரண்டு ஒருமைகளடுக்கி வாங்கின வெனப்பன்மை முடிபைக்கொண்டன.

14. கோலம்—பன்றி; விரகால்—சாமர்த்தியத்தால்; குறள் ஆய்-வாமனனாய்; ஆனது—நீங்காது; முனை அலம்—கூர்மையுடைய கலப்பை ; நானுவிதம்—பலவித உருவங்கள் ; பரி —குதிரை.

## சிவநாம மகிமை.

இதனை யியற்றியவர் சிவப்பிரகாச சுவாமிகள். இவர் வெள்ளியம்பலவாண சுவாமிகளிடம் இலக்கணங் கற்றுத்தேர்ந்தனர். தமது ஆசிரியராகிய வெள்ளியம்பலவாண சுவாமிகளோடே மாறுபட்டுத் திருச்செந்தூரில் வசித்த தமிழ்ப் புலவரொருவரை இவர் வெற்றி பெற்றனரென்ப. இவர்க்கு வேலாயுத சுவாமிகள், கருணைப்பிரகாச சுவாமிகள் என்னும் இரண்டு சகோதரரும், ஞானம்பிகை யென்னும் ஒருசகோதரியும் உண்டு. இவர்களில் இவர் மாத்திரம் துறவறமேற்கொண்டாழுகினர். இவர் பல நூல்களை யியற்றினர். இவர் காலம் சுமார் 270 வருடங்கட்கு முற்பட்டதென்பார்.

சிவநாம மகிமை.—சிவபிரானது திருநாமத்தின் பெருமையை யுணர்த்துவதென்பது.

15. ஆகமம்—சைவாகம நூல்கள்; தடுமாறன்மின்— தடுமாற்ற மடையாதீர்கள்; சோதி—சூரியன்; தீது—பாவம்; என்மின்—என்று சொல்லுங்கள்.

16. புல்லர்—அஞ்ஞானிகள்; போதர்—ஞானிகள். நல்ல ஆகும்—புண்ணிய காரியங்கள் கைகூடும். நவை—பாவம்; செல்லல்—துன்பம்; சுருதி—வேதம்.

17. நயனங்கள்—கண்கள்; ஆக்கை—சரீரம்; முயங்கிய—பொருந்திச் செய்த.

18. சாந்திராயணம்—அமாவாசை முதல் பௌர்ணமி வரை தினமொன்றுக்கு ஒவ்வொரு பிடி சாதம் அதிகப் படுத்தியும், பௌர்ணமி முதல் அமாவாசைவரை தின மொன்றுக்கு ஒவ்வொரு பிடி சாதம் குறைத்தும் புசித்துக்கொண்டு அனுசரிக்கும் ஒருவகை விரதம். வாய்ந்த மேனி—பொருந்திய உடல்;இறந்திடாது போந்த பாதகம்—அழியாது நேர்ந்த பெரும் பாவங்கள்; பொருக்கென—விரைவாய்.

19. இது வில் என்ன—இது வில் என்னும் படி; நுதல்—புருவம்; வல்லி பக்கன்—கொடி போன்ற உமாதேவியாரை இடது பாகத்திலுடைய சிவபிரான்; காணிய—தரிசிக்க; செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

20. வண்ணம்—அழகு; உள் நடுங்குவன்—மன நடுக்கங் கொள்வான்; ஒண் திறல் கூற்றுவன்—புகழும் வலியுமுடைய யமன்; திண்ணம்—நிச்சயம்.

## அருள் விளக்க மாலை.

21. கதி—மோட்சம்; கண்ணில் கலந்த மணி—கண்ணில் பொருந்திய கருவிழி; கதிர் ஒளி—கிரணங்களையுடைய பிரகாசம்; விதிக்கும் உலகு உயிர்—(பிரமனால்) படைக்கப் படும் உலகத்திலுள்ள பிராணிகள்; மெய்யுணர்ந்தோர்—உண்மைப் பொருளையறிந்த ஞானிகள்; தீங்கனி—இனிய பழம்; மதிக்கும் மதி—(யாவராலும் உயர்வாக) எண்ணப்படும் அறிவு; வயங்கு தனி நிலை—விளங்குகின்ற ஒப்பற்ற (மேலான) நிலை; மறை முடி—வேதங்களின் உச்சி.

22. தனி தனி—வெவ்வேறாய்; முக்கனி—மூன்று வகையாகிய பழங்கள்; அவை:—மாம்பழம், வாழைப்பழம், பலாப் பழம். வடித்து—வடி கட்டி; தெங்கின் தனி பால்—இளநீர்;

தெங்கு—தென்னை; விரவி—கலந்து; அளைந்து—கலந்து. அநித்தம் அற—அழிவில்லாமல்; அலங்கல்—மாலை.

23. கையாத—கசக்காத; புரையாத—ஒப்பில்லாத; கனல்—நெருப்பு; போகாத புனல்—வற்றாத நீர்; கால்—காற்று; பெருந்தகை—உயர்ந்த குணமுடையவன்; எற்றருள்—அங்கீகரித்தருள்.

## நள வெண்பா.

### காப்பு.

1. நேசர்—நட்பா யுள்ளவர்கள்; இதம் கூர—நன்மை மிக; வலயம்—வட்டம்; மா சரிதம்—பெருமை பொருந்திய கதை; மா + மகிழ் + மால் + தன்—இலக்குமி தேவி களிக்கின்ற திருமாலினுடைய, மா + மகிழ் + மாறன்—பெருமை பொருந்திய மகிழம்பூமாலையை யணிந்த நம்மாழ்வார்; தாள்—பாதம்; மா—திருமகள்; பெருமை. மகிழ்—களிப்பு; மகிழம்பூ. மாறன்—மால் + தன் ; விஷ்ணுவினுடைய; மாறன்—நம்மாழ்வார்.

2. தனி கோலம்—ஒப்பற்ற பன்றி; வராகாவதாரம். அடியவன்—பிரகலாதாழ்வான்; வேழம்—கஜேந்திரன்; முதல்—ஆதிமூலம்; இறை—கடவுள்.

3. கலாபம் மயில்—தோகையை யுடைய மயில்; இங்கேஉமாதேவியாரைக் குறித்தமையால் அடையடுத்த உவமையாகுபெயர்; மா நீற்றார்—பெருமை பொருந்திய திருநீற்றை யணிந்தவர்; கழிய-மிகுதியாய்; ஆர்த்தார்—(ஆபரணமாக) பூண்டவர்; ஓர் காப்பு—ஒப்பற்ற காவலாவார்.

### அவை யடக்கம்.

4. வெம் தறு கண் வேழம்—கொடிய அஞ்சாமையை யுடைய யானை; வேரி—மணம்; தந்து—நாளம்; நூல். சமைவது—முயல்வது; பை தொடை—இனிமையாகிய தமிழ்ப் பாடல்கள்; தேன்—வண்டுகள்; தார்—மலர்மாலை.

நூல்.

5. காமர்—அழகு; கயல்—கெண்டை மீன்கள்; காவி முகை—நீலோற்பல மலர்களின் பேரும்புகள்; நெகிழ-மலர;தளை அவிழ-கட்டு விரிய; மலரவென்பது. நாட்டம்—கண்கள்;தகைமைத்து—தன்மையை யுடையது. சாகரம்—கடல்; முன் நாட்டும்—முன்னதாக எடுத்துச் சொல்லப்படும்.

முகத்திற்குத் தாமரையையும், அம்முகத்திலுள்ள கண்களின் பிறழ்ச்சிக்குக் கயலின் பிறழ்ச்சியையும் அக்கண்களிலுள்ள கரிய மைக்குக் காவிமலர்களின் கருமையையுங் கருதிப் பூமகளின் கண்களுக்கு அந்நாட்டை ஒப்பிட்டனர்.

6. வைகும்—வசிக்கும்.

7. வாங்கு வளை—வளைந்த வளையல்கள்; வதனம் மதி—முகமாகிய சந்திரன்; குவளை—நீலோற்பல மலர்கள்; தேன் ஆடி—தேனில் முழுகி.நளன் பலபெண்கள் தன்னைக் காணப் பூஞ்சோலையிற்புகுந்தானென்பது கருத்து. கண்களின் மிகுதியை நோக்கி 'குவளைக்காடு' என்றூர்.

8. நீள்+நிறம்—சிறந்த வெண்ணிறம்; தாள்+நிறம்—பாதங்களின் சிவந்த நிறம்; பொய்கை தலம்—தடாகமாகியஇடம்; மாண் நிறத்தான்—பெருமை பொருந்திய (அழகிய) நிறமுடைய நளன் : பெருமை பொருந்திய மார்பை யுடையவ னெனினுமாம்; நிறம்—மார்பு; அப்பு உள்—நீரில்; முளரி தலை—தாமரை மலரில்; வைகும்—வாசஞ் செய்யும்; புள்—பறவை. தனது உடலின் வெண்ணிறத்தால் சோலையின் பசுமை நிறமும் தனது பாதத்தின் செந்நிறத்தால் தடாகத்தின் கருமை நிறமும் மாறும்படி அன்னப் பறவைதோன்றிற்றென்பது.

9. திரு மடந்தை—அழகிய தமயந்தி; திருமகளைப் போன்ற தமயந்தி யெனினுமாம்; மடந்தை—பெண்; வாமம்—அழகு; சேமம்—காவல்.

10. வடிவில் திகழ்கின்ற—அழகால் விளங்குகின்ற; நல் நுதல்—அழகிய நெற்றியையுடைய தமயந்தி; என் நாடல்—(நீ) விரும்புவது யாது? நாடல்—விரும்புதல்; தேடுத லெனினுமாம்.

11. செம் மனத்தான்—செவ்வையாகிய மனமுடையவன்; நடு நிலையை யுடையவன். செங்கோலான்—நீதி தவறாத அரசாட்சியுடையவன்; இதன் எதிர்ப்பதம் கொடுங்கோலான். வாங்கும்—கவரும், அபகரிக்கும். மேல் நிலம்—தேவ லோகம்; நால் நிலம்—நான்கு வகைப் பட்ட நிலம்; அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்; அவற்றுள் காடும் காடுசார்ந்த விடமும் முல்லை; நாடும் நாடு சார்ந்த விடமும் மருதம்; கடலும் கடல்சார்ந்த விடமும் நெய்தல்; மலையும் மலைசார்ந்த விடமும் குறிஞ்சி.

12. மறம்—வீரம்; திண் தோள் வலி—வலிய தோள்களின் பராக்கிரமம்; மால்—திருமால்; அம் கண் மா ஞாலம்—அழகிய இடமகன்ற பெரிய உலகம்.

13. வாவி உறையும்—தடாகங்களில் வசிக்கும்; மடம்—இளமை; ஆதி—ஆவாய்; காவின் இடை—சோலையில்.

14. பை கமுகின் கூந்தல்—பசிய பாக்கு மரங்களின் பாளைகள்; கங்கை கொழுந்து ஓடும்—கங்கையின் நீர்த்துளிகள் தெறிக்கும்.

15. தெள் அரி கண் பூ மகள்—குற்ற மில்லாத செவ்வரிகள் படர்ந்த கண்களையுடைய திருமகளைப் போன்ற தமயந்தி; பொரு வேல்—போர் செய்கின்ற வேல்.

16. கெட்ட சிறு மருங்குல்—இளைத்த சிறிய இடுப்பு; கட்டி கரைய—மண் கட்டிகள் கரையும் படி; தேர் ஊர்—தேரையோட்டு; இட்ட—எறிந்த.

17. கண்ணுற்று—பார்த்து; விண்ணவர் கோன்—தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன்; ஏவல் தொழிலுக்கு இசை—நான் கட்டளையிடுந் தொழிலுக்கு இணங்குவாயாக; நேர்ந்தான்—ஒப்புக் கொண்டான்; ஓராது—அறியாமல்; இசைத்து—(அவ்வாறே யாகுக வென) சொல்லி.

18. ஆகம்—மனம்; இடவாகுபெயர். கோது ஆக வென்ருன்—குற்றமாக (எண்ணி) வென்ருன்; அவளைத் தான் விவாகஞ் செய்து கொள்ளக் கொண்டிருந்த விருப்பத்தை யொழித்தானென்பது.

19. கன்னி மாடம்—அந்தப் புரம்; பெண்கள் வசிப்பதற்குத் தனியா யமைக்கப்பட்ட விடம்; விஞ்சைக்கு இறைவன்—மந்திரங்களுக்குத் தலைவன். ஊசல் குழை— ஊஞ்சலைப்போல் அசையும் காதணி; வெள்ள வாள் நீர் சோர விட்டு—கூர்மையாகி வாள் போன்ற கண்ணின் தன்மை சோரவிட்டு; கடைக்கண்ணால் பார்த்து என்பது.

20. இமையவர்—தேவர்; பொன்னுலகம்—தேவலோகம்; புரவலன்—அரசனுகிய இந்திரன்; தொடை—பூ மாலை; தும்பி—வண்டு.

21. போது அரி கண்—தாமரைமலர் போன்ற செவ்வரி படர்ந்த கண்; ஆதரித்தார்—விரும்பினவர்களாகிய அரசர்கள்; அவையகத்து—சபையில், தாள வெண் குடை—முத்துக்களாலாகிய வெண்மையாகிய குடை; வெண்தாள மெனினுமாம்.

22. விண்ணவர் தம் ஏவல்-தேவர்களின் கட்டளை; நண்ணு புகழ்—பொருந்திய புகழ்: பெண் அணங்கு—பெண்களில் தெய்வமாதைப் போன்ற தமயந்தி; வன்மொழி—கடுஞ் சொல்; மென்மொழி—இனிய சொல். தமயந்தி தேவர்களின் விருப்பத்திற்கிணங்காது மறுத்துரைத்தமையால் அதனை வன்மொழி எனவும், தான் அந்தத் தேவர்களின் கருத்திற்கிணங்க மொழிந்தமையால் அதனை மென்மொழி யெனவுங் கூறினன்.

23. அங்கி—நெருப்பு; அமுதம் நீர்—அமுதம் போன்ற இனியநீர்; சங்கை அற—சந்தேகமில்லாமல்; ஆகண்டலன்—இந்திரன்; தருமன்—யமன்; மற்ருேன்—அக்கினி. அமுதநீர்—உணவும் நீருமெனினுமாம்.

24. வையம்—உலகம்; பகல்—பகல்பொழுது; பொய்கை—தடாகம்; புள்—நீர்ப் பறவை; பைய—மெல்ல; செம்மை+வாய—செவ்வாய—சிவந்த வாயையுடைய; வெம்மை+வாய்-வெவ்வாய்—வெப்பம் பொருந்திய; விரி கதிரோன்—(ஒளி) பரந்த சூரியன்; வெற்பு—மலை.

25. வான் கருப்பு வில்லி—சிறந்த கரும்பாகிய வில்லையுடைய மன்மதன்; கணை—(மலர்) அம்புகள்; புன் மாலை அந்தி—அற்பமாகிய மாலையாகிய அந்திப்பொழுது; மாலை அந்தி—இருபெயரொட்டுப் பண்புத்தொகை; மாலைப்பொழுது மிகவுஞ் சிறிது நேரமே நின்று கழிதலால் அதனை "புன்மாலை" என்றார். மாலைப் பொழுதில் முல்லை மலர்கள் மலர்தலால், 'முல்லை யெனும் மென்மாலை தோளசைய' வென்றார். சங்குகள் ஒலிக்கவும், மன்மதன் மலரம்புகளைக் கொண்டு மெய்யைக் காக்கவும், முல்லைமலர் மாலை தோளிலசையவும் அந்திப் பொழுதாகிய அரசன் கம்பீரமாய் நடந்தானென்பது.

26. ஊக்கிய சொல்லர்—உரத்த சொற்களையுடையவராய்; துடி—ஓர்வகைப் பறை; வீக்கிய—இறுகக் கட்டிய; இடை யாமம்; நடு ராத்திரி; இருளின்புடைவாய் இருள் புடைத்தால போன்று—இருளில் அமைந்த இருளானது தடித்து உருக்கொண்டாற்போல.

27. வில்லி—(கரும்பு) வில்லையுடைய மன்மதன்; வல்லி—கொடிபோன்ற தமயந்தி; வேட்டிடு—விரும்பும்; வேள்—பகுதி. குணவாயில்—கிழக்குத் திசையில்.

28. முற்றிய பின்—முடிந்தபின்; வரை—மலை; விரை செறிந்த—மணம் நிறைந்த; துவள—அசைய; தயங்க—விளங்க; வால் வளை—வெண்மையாகிய சங்குகள்.

29. விழி தாமரை-கண்களாகிய தாமரை மலர்; கலியாண மண்டபத்திலுள்ள அரசரனைவரும் தமயந்தியின் பேரழகை இமை கொட்டாது பார்த்திருந்தமை கருதி 'மன்னர் விழித்தாமரை

பூத்த மண்டபம்' என்றூர். செய்ய தாள்—சிவந்த பாதம்;செம் கம லம் பொய்கை—செந்தாமரையுடைய தடாகம்.

30. இன்ன பரிசு—இப்படிப்பட்ட தன்மை; இயல் அண ங்கு—அழகையுடைய தெய்வப் பெண் போன்ற தோழி; தார்—மாலை.

31. சேடி—தோழி; ஈரிருவர்—நால்வர்; அவராவார்:—இந் திரன், வருணன், அக்கினி, யமன். பூ வரைந்த—மலரை முடித்த; மாசு—குற்றம்; ஊசலாடுற்ருள்—ஊஞ்சலைப்போல் (நிலைநில்லாத மனம்) தடுமாற்றமடைந்தாள்.

32. மாபு—குலம்; செம்மை—நற்குண நற்செய்கைகள்; கடிமாலை—சுயம் வரமாலை; கடி—விவாகம்; சூழ்விதியின் மன்ன வன்—நிறைந்த விதிக்குத் தலைவனுகிய கடவுள்.

33. காசினி—பூமி; தோய்தல்—படிதல்; நல் நுதலே அன் னுள்—அழகிய நெற்றியையுடைய திருமகளொத்த தமயந்தி;

34. விண் அரசர்—தேவர்; சுளிக்க—கோபிக்க; கண் அகல் ஞாலம்-இடமகன்ற பூமியி லுள்ளவர்கள்;களிகூர-சந்தோஷம் மிக; வல் மாலை—கொடிய (பொருமையாலுண்டாகிய) மயக்கம்; சூட—கொள்ள; வயம் வேந்து—வெற்றியையுடைய நளன்; பொன்—திருமகள் போன்ற தமயந்தி.

35. திண் தோள்—வலிய தோள்கள்; ஒண் தாரை—-ஒளியை யும் கூர்மையையுமுடைய,கோ—வஜ்ஜிராயுதம் போன்ற, மாலை—(பகைவரைக் கொல்லும்) தன்மையுடைய, வேலான்-வேலாயுதத் தை யுடைய நளன்; (தமயந்தி நளனுக்கு மாலை சூட்டினதும், அவளை மணஞ்செய்து கொள்ளக் கருதி வந்த அரசர்களின் முகம் நாணத்தால் வெளுத்துப் போயின வென்பது கருத்து) தோமாலை வேல்—உயர்வாகிய மலர் மாலையணிந்த வேலெனினுமாம்; குலம் மாலை—குலத்திற்குப் பூமாலை.

36. வேலை பெரு அமுதம்—கடலால் பெறப்படாத அமுதம்; வான் நாடர்—தேவர்; வேலை பொரும்—கரையை மோதும்; கலி

நீர்—ஓசையை யுடைய நீரையுடைய கடல்; புல் நெறி—தாழ்வாகிய (தீய) வழி; இருங்கலி—பெருமை யாகிய கலிபுருஷன்.

37. இமையவர் தம் கோன்—தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன்.

38. வை—கூர்மை; தனி யானை—ஒப்பற்ற ஐராவத மென்னும் யானை.

39. வெறி—வாசனை; கேள்வன்—கணவன்;கீழ்மை—தாழ்வு; கொதித்து—கோபங்கொண்டு.

40. வாய்மை—சத்தியம்; செங்கோல் வளன்—நீதி தவறாத அரசாட்சியா லுண்டாகிய செல்வம். தூய்மை—பரிசுத்தம்; பூமான்—தாமரை மலரில் வசிக்கும் திருமகள் போன்ற தமயந்தி; அடும் கொற்றம் வச்சிரத்தான்—(பகைவரை) கொல்லும் வெற்றி பொருந்திய வச்சிராயுதத்தை யுடைய இந்திரன்.

41. செரு—போர்; கதிர்—ஒளி;உடன் ஆக—சம்மதிப்பீராக; வெகுண்டு—கோபித்து.

42. கணி—சோதிடர்; அணி மொழி—அழகிய சொற்களை யுடைய தமயந்தி; அண்ணலவன்—பெருமையிற் சிறந்த நளன்; பணி மொழியர்—வணக்கமாகிய சொற்களை யுடைய தோழிப் பெண்கள்; குறு ஏவல்—சிறிய ஏவல் தொழில்கள்; கொழும் பொன் அறை—மிக்க அழகிய அறை.

## பெரிய புராணம்.

இதன் ஆசிரியர் சேக்கிழார் நாயனா ரென்பவர். இவர் தொண்டைநாட்டில் குன்றத்தூரில் வேளாளர்குலத்தில் சேக்கிழார் மரபில் தோன்றினர். இவரது இயற்பெயர் அருண்மொழித் தேவர். இவர் தமதிளமையிலேயே தமிழ்க்கல்வியை நன்கு பயின்று, அக்காலத்தரசாட்சி செய்து கொண்டிருந்த அநபாயச்சோழன் சமஸ்தானத்தில் முதல் மந்திரியா யிருந்தார். இஃதிவ்வாறாக,

மேற் கூறிய சோழனும் சைவருட்பலரும் சமணநூலாகிய சீவக சிந்தாமணியைப் பெரிதும் விரும்பிக் கற்பாராயினர். அதுக

ண்ட நாயனார் அச்சோழனை நோக்கி, "வேந்தர் வேந்தே! இம்மை மறுமை யென்னும் இருவகைப்பயனையு மளிக்க வல்ல சிவசரிதையை விட்டு இந்த அவசரிதையைக் கேட்பதில் பயன் யாது?" என்றனர்.

அதன்மேல், அவ்வரசன் சிவபிரான் சரித்திரத்தையும் சிவனடியார் சரித்திரத்தையு மமைத்துத் தாங்களே ஒரு நூலை யியற்ற வேண்டுமென இவரை வேண்டிக்கொண்டனன். பிறகு, இவர் அவ்வாறே அவன் வேண்டுகோளுக்கிணங்கி இந் நூலையியற்றினரென்ப.

இவர் தோன்றினமையால், இவர் மரபு என்று மழியாப் புகழ்படைத்தமை கருதி, இவர் மரபின் பெயராகிய சேக்கிழார் என்னும் பெயர் இவர்க்கு வாய்த்த தென்பார்.

பெரிய புராணம்:—பெரியாரது பழைய சரித்திரத்தை யுணர்த்தும் நூலென்பது பொருள்; பெரியரென்றது இங்கே சிவபிரானடியார்களை; இப்பொருளில் பெரியர் என்பதனீற்றிலுள்ள மெய், * * * 'சில விகாரமாம் உயர்திணை' என்பதனால் கெட்டதென்க. பெரிய வென்பதைக் குறிப்புப் பெயரெச்சமாய்க்கொண்டு (புராணங்க ளெல்லா வற்றிலும்) சிறந்த புராண மெனினுமாம்.

## கண்ணப்ப நாயனார்.

1. மை செறிந்தனைய மேனி — மையைத் திரட்டினாற் போன்ற கரிய நிறம்; மறவர்—வேடர்; அடைவு இலார்—அடைதலில்லாதவர்; உடை வன் தோலார்—வலியதோலை (ஆடையாக) உடுத்தவர்; வன்தோலுடையார் எனமாற்றிப் பொருள் கொள்க. பொச்சையின் நறவு—மலைத்தேன்; ஊன்—மாமிசம்; புழுக்கல்—சோறு; நச்சு அழல் பகழி—விஷம்போல் வருத்தும் அம்புகள்.

2. காமர்—அழகு; இரும் புலி பறழின் ஓங்கி—பெருமை பொருந்திய புலிக்குட்டிபோல் வளர்ந்து; இறவுளர் — வேடர்; அரும் பெறல் உலகம் — பெறுதற்கரிய உலகம்; அளப்பரும் பெருமை—அளவிட்டுச் சொல்ல முடியாத பெருமை; பொலிந்து—விளங்கி; தரும் குறி—(மேன்மை) தரும் அடையாளம்.

3. அண்ணல்—பெருமையிற் சிறந்தோன்; திண் சிலை—வலிய வில்; ஆர்த்தார்—ஆரவாரஞ் செய்தார்; பொரு இல் சீர்—ஒப்பில்லாத அழகு; கண்ணினுக்கு அணியா (க) —. கண்களுக்கு ஆபரணம் போல் கொண்டு; அணியா வெண்பதைச் செய்யா வென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்ச மாகக்கொண்டு கண்களில் ஒற்றி யெனினுமாம்; இப்பொருளில் கண்ணினுக்கு என்பதை உருபு மயக்கமாகக் கொள்க. கலன்—ஆபரணம்.

4. வண்ணம்—அழகு; மலர — விரிவாக; பொங்க—மிக; கலை—கிரணம்; செவ்வி எய்தினர்—பருவமடைந்தார்; எல்லை—அளவு; பொலிவு—விளக்கம்.

5. தாள்—பாதம்; நீடு தானையார்—நீண்ட வஸ்திரமணிந்தவர்; வாளி—அம்பு; சாபம்—வில்; வெய்ய வன்கணார்—கொடிய பராக்கிரம முடையவர்; மீளி—வலிமை.

6. ஏனம்—பன்றி; எண்கு—கரடி; திண் கலை குலம்—வலிய கலைமான் கூட்டங்கள்; கானம் மேதி—காட்டெருமை; மரை—மான்; ஆன மா—முதலான மிருகங்கள்: மருண்டு—மயங்கி; பயந்தெனினுமாம். நூறினர்—கொன்றார்.

7. வில்லியார் என்றது — திண்ணனரை ; மாடு — பக்கம்; சமீபம். துணி—துண்டம்; வராகம்—பன்றி; காதம்—பத்துமைல் தூரம்; எய்த்தோம்—இளைத்தோம்; அடியில் தாழ்ந்தார்—பாதங்களில் (வீழ்ந்து) வணங்கினர்.

8. எம்மை பசி ஆற்ற உற்றது—எமக்குப் பசி மிகவு மதிகரித்தது.

9. தேக்கு—தேக்கமரம்; நீண்ட குன்று—திருக்காளத்தி மலை; பொன் முகலி—அழகிய முகலி நதி.

10. பொங்கிய சினம் வில் வேடன்—மிகுந்த கோபத்தையும் வில்லையுமுடைய வேடனாகிய நாணன்; இது தன்னை கொண்டு போதுமின்—இந்தப் பன்றியை உடன் கொண்டு வாருங்கள். முகலி—பொன் முகலி நதி; காவதம் அரையில் கண்டார்—அரைக்

காவதத்திற் கண்டார் எனமாற்றுக; அரைக்காத தூரத்தில் கண்டார்;செம் கண் ஏறு—சிவந்த கண்களை யுடைய எருது; வைகும்—தங்கி யிருக்கும்.

11. சேண்—ஆகாயம்; செவ்வே—செவ்வையாய்; கோணம் இல்—வளைதலில்லாத.

12. மாகம் ஆர்—ஆகாயத்தை யளாவிய; மலை எழு கொழுந்து—மலையில் தோன்றிய கொழுந்து; ஏக நாயகர்—ஒரே கடவுளாகிய சிவபிரான்; பேருவகை—பெருங்களிப்பு.

13. அமுது செய்ய—புசிக்க; சால—மிக; எய்த வேண்டும்—(திரும்பி) வரவேண்டும்.

14. போதுவர்—(சிவபிரானை விட்டுப் பிரிய மனமில்லாதவராய்ச் சிறிது தூரம்) போவார்; புல்லுவர்—தழுவிக் கொள்வார்; புனிறு ஆ—தலையீற்றுப் பசு; கோது அற—குற்றமில்லாமல்.

15. பதம்—பக்குவ நிலைமை; வாலிய சுவை—இனிய ருசி; அதுக்கி—மென்று; சாலவும் இனிய—மிகவும் ருசியுள்ளவை; சருகு இலை இணைத்த கல்லை—உலர்ந்த இலைகளால் செய்யப்பட்ட தொன்னை; ஏலவே கோலி—பொருந்தும்படி (நன்றாய்) தைத்து.

16. தேவு மால்—தெய்வத்தினிடத்திற் செலுத்தும் (பக்தியாகிய) பயித்தியம்; கொண்டு போதும்—அழைத்துச் செல்வோம்.

17. கானவர்—வேடர்;இங்கேநாணனும் காடனும். போனது ஓரார்—போனதை யறியாதவராய்; கடிதினில்—விரைவாய்; கல்லை—தொன்னை; ஊன் அமிர்து—மாமிசமாகிய உணவு; மஞ்சனம்—அபிஷேகம்; உன்னி—நினைத்து; குஞ்சி-குடுமி; துதைய - நெருங்க.

18. தனு—வில்; சரம்—அம்பு; புனிதம்—பரிசுத்தம்; போனகம்—உணவு; வெற்பு (காளத்தி) மலை.

19. நாயனார்—பெரியார்; இங்கே சிவபிரான். ஈண்டி சென்று—நெருங்கிப் போய்; வெற்பின் முளைத்து எழு முதல்—சிவபெருமான்; முடிமிசை—தலையில்; அமலனார்—பரிசுத்தராகிய சிவபெருமான்; மாற்றி—களைந்து.

20. கொழுவிய தசை—கொழுப்புள்ள மாமிசம்; அழல்—நெருப்பு; நாயனீரே—சிவபெருமானே! அமுது செய்தருள்—புசித்தருள்.

21. அந்தி மாலை—அந்தி யாகிய மாலைப்போது; வெவ்விலங்கு—வெம்மை+விலங்கு; துஷ்டமிருகங்கள்; மெய்ம்மையின் வேறுகொள்ளா செவ்விய அன்பு—உண்மையினின்றும் வேறுகாத அழகிய (சிறந்த) அன்பு; மெய்யன்பு என்றபடி. மை வரை—கரிய மலை; ஐயர் மருங்கு—சிவ பெருமான் சமீபம்.

22. வரும் கறை பொழுது—(மாலைக்குப்பின்) வரும் இராக்காலம்; மல்கிய யாமம்—(இருள்) நிறைந்த நடுராத்திரி; புள்ளின் சூழ் சிலம்பு ஓசை—பறவைகளின் நிறைந்த ஒலி; சென்று சுருங்கிட—போய்க் கழிய; தம்பிரான்—தமக்குத் தாமே தலைவர்; சிவபிரான்.

23. ஏறு கால் பன்றி—(வயிற்றில்)ஏறுங்காலையுடைய பன்றி; புனம்—காடு; விரகினால் — சாமர்த்தியத்தால்; ஊறு—கொலை; மாறு அடு சிலை—பகைவரைக் கொல்லும் வில்.

24. நல்ல பதம் உற—மேலான பக்குவ மடைய; தூய்மை—பரிசுத்தம்; ஒல்லையினில்—விரைவாய்.

25. வனம் சரர்—காட்டில் சஞ்சரிப் பவராகிய வேடர் இமையோர்—தேவர்; அந்தணனர்—இங்கே சிவ கோசரியார்; முந்தை முறை—முன் செய்த தன்மை.

26. ஊன் அமுது—மாமிசமாகிய உணவு; கல்லை—தொன்னை; ஏனம்—பன்றி; கலைகள்—கலைமான்கள்; மரை—ஒரு வகைமான்; கடமை—காட்டுப் பசு; இவையிற்றில்—இவைகளில்; இற்று, சாரியை.

27. இ பரிசு—இந்த வகை; அமுது செய்வித்து—உண்பித்து; ஒழுகுவார்—நடப்பவராகிய நாயனர்; அல்—இரவு.

28. மா முனிவர்—சிறந்த முனிவராகிய சிவகோசரியார்; வனம் வேந்தர்—காட்டிலுள்ள வேடர்களுக்குத் தலைவராகிய

திண்ணனார்; வனம்—இடவாகு பெயர்; சால மிக—மிகவு மதிக ாய்; ஒரு பொருட்பன்மொழி. தளர்வு எய்தி—வருத்த மடை ந்து; ஆம் முறை—தகுந்த வழி; தீமை—குற்றம்.

29. அன்பனார்—அன்பையுடைய வராகிய திண்ணனார்; மன் னிய —நிலைபெற்ற.

30. மின் திகழும்—மின்னலைப் போல் விளங்கும்; சடை மவுலி வேதியர்—சடை முடியையுடைய வேதத்திற்குத் தலைவராகி யசிவபிரான்;வன் திறல்—மிக்க வலிமை; ஒரு பொருட்பன்மொழி.

31. பரிவு—அன்பு; பரிசு—தன்மை; புனல் சடிலம் திரு முடியார்—கங்கையை யணிந்த சடையை யுடைய அழகிய தலையை யுடையவராகிய சிவபிரான்.

32. புனல்—நதி; இது தானியாகு பெயர். பிஞ்ஞகன்—சடையை யுடைய சிவபெருமான்; பிஞ்ஞகம்—சடை; இது பிஞ் சகமெனவும் படும்.

33. சென்னி ஏறு நாள் மலர்—தலையிலணிந்த அப்போது பூத்த புதிய மலர்; தேறுவார்க்கு—ஆராய்ந்தறியும் அடியார்க்கு; அணுக வந்து—நெருங்கி வந்து; வெவ்வேறு இயல்பு—வேறு வேறாகிய தன்மை; எனவே, ஊனமுதத்தைத் தொன்னையிலும், மஞ்சனப்புனலை வாயிலும் நாண்மலரைத் தலையிலும் அமைத்துக் கொண்டபடியாம்.

34. அண்ணலார்—பெருமையிற் சிறந்தவர்; அடிகளார்—கடவுள்; பரிவு—அன்பு; திரு நயனம்—அழகிய கண்; துண் என—விரைவாக; வண்ணம் வெம் சிலையார்—அழகிய கொடிய வில்லை யுடையவராகிய திண்ணனார்; வல் விரைந்து—மிக்க விரைவாய்.

35. குருதி—இரத்தம்; கொந்து அலர்—கொத்தாக மலர்ந்த; கொத்து என்பது எதுகை நோக்கி மெலித்தல் விகாரம் பெற்றுக் கொந்தென நின்றது. குஞ்சி—குடுமி; பை தழை அலங்கல் மார் பர்—பசுமையாகிய இலைகளாலாகிய மாலையை யணிந்த மார்பை யுடையவராகிய திண்ணனார். தழை அலங்கல்—தழைத்த மலர் மாலை யெனினுமாம்; பதைத்து—துடித்து.

36. ஆவியின் இனிய—உயிரைக் காட்டிலும் சிறந்த; மேவி னூர்—(தம்மை) அடைந்த அடியார்; விமலனூர்—பரிசுத்தராகிய சிவபிரான்.

37. இனம்—கூட்டம்; செம் கண் ஏறு—சிவந்த கண்களை யுடைய எருது; வெருக்கொண்டு—பயப் பட்டு; புனத்திடை—காட்டில்; பூத நாயகன்—(மண், விண், நீர், நெருப்பு, காற்று என் னும் ஐந்து) பூதங்களுக்குத் தலைவராகிய சிவபிரான்; பூதகணங்க ளுக்குத் தலைவரெனினுமாம்; கடிது—விரைவாய்.

38. கொற்றவர்—தலைவர் ; புண் நீர்—உதிரம்; இழிதர—சொரிய; இற்றை—இப்போது; பார்ப்பார்—ஆலோசிப்பவராகிய திண்ணனூர்; உரை—பழமொழி; கண்டார்—அறிந்தார்.

39. இடந்து—களைந்து; அப்பின்—அழுத்தினல்; அடுக் கும்—தகும்; மதர்த்து எழும் உள்ளம்—களித்து எழும் மனம்; சரம்—அம்பு; வாங்கி—களைந்து.

40. ஏற பாய்ந்தார்—(களிப்பினல்)உயரக்குதித்தார்;மதி—அறிவு; நகை—மகிழ்ச்சி; ஒன்றிய—பொருந்திய; உன்மத்தர்—பைத்தியக்காரர்.

41. வள்ளலார்—ஈகைக் குணமுடையவராகிய நாயனூர்; கண்ணைக் களைந்து உதவினமை கருதி "வள்ளலார்" என்றூர். நலத் தினை—மேன்மையை; நாயனூர்—சிவபிரான்; உலப்பு இல்—முடி வில்லாத; அளவில்லாத என்பது. கொள்கையின்—பக்தியில்; உம்பர் மேலார்—தேவர்களிலும் உயர்ந்தவராகிய திண்ணனூர்; பாய கண்டனர்—பெருகச் செய்தார்.

42. மற்றை கண்—இடக்கண்; குருதி பொங்கி மண்டும்—இரத்தம் பெருகி வழியும்.

43. கண் நுதல்—நெற்றிக்கண்ணை யுடையவராகிய சிவ பிரான்; இடந்து—களைந்து; உள் நிறை விருப்பு—மனத்தில் நிறைந்த அன்பு; பகழி—அம்பு.

44. செம் கண் வெள் விடை—சிவந்த கண்களையுடைய வெண்மையாகிய எருது; அம் கண்ணர்—அழகிய கண்களை யுடையவர்; தம் கண்முன்—தமது கண்ணுக்கு முன்னால்; மூன்றடுக்கு—மூன்று முறை; நாக கங்கணர்—பாம்பைக் கங்கணமாக அணிந்தவர்; என்ற(து)—என்று சொன்னது.

45. கானவர் பெருமானார்—வேடர்களுக்குத் தலைவராகிய கண்ணப்ப நாயனார்; ஐயர்—சிவபெருமான்; உற்று—நெருங்கி; நான்முகன்—நான்கு தலைகளையுடைய பிரமன்; வானவர்—தேவர்.

46. பேறு—பாக்கியம்; ஊறு—சேர்ந்த துன்பம்;ஏறு உயர்த்தவர்—ரிஷபத்தைக் கொடியாக உடைய சிவபிரான்; வலத்தின்—வலப் பக்கத்தில்; மாறு இலாய்—அழிவில்லாதவனே!

## கஜேந்திர மோட்சம்

இதனை யியற்றியவர் திருவடி தாசரென்னும் புலவர் திலகர். இவர் வரலாறு புலப்படவில்லை. ஆயினும் இவர் இந்நூலினிறுதியில், 'நற்குல வேங்கை பூபன், மகவென வீறுங் கச்சி வாழ்திருவடியன் தானே' எனக் கூறி யுள்ளமையால், இவர் தந்தை வேங்கைபூப னென்பதும், இவர் காஞ்சிபுரத்தில் வசித்தவரென்பதும், இவர் பெயர் திருவடி தாசரென்பதும் விளங்கும். அன்றியும், இந்நூலின் காப்புச் செய்யுளில், 'தூய, மாதவர்க் கடியனந்த மணவாள முனியின் சீர்த்தி,காதக வழுத்தி யேத்தி நண்ணுதும் அவன் நற்றாளே" என்றமையால், இவர் தென்கலை வைஷ்ணவ ரென்பதும் வெளிப்படை.

கஜேந்திர மோட்சம்—கஜேந்திரனென்னும் யானை மோட்சமடைந்த செய்தியைக் கூறும் நூல் என்பது பொருள். கஜம்—யானை; இந்திரன்—தலைவன்; யானைக்குத் தலைவனென்பதி.

### நூல்.

1. பார்—உலகத்தார்; இது பருமையென்பதன் விகாரம்; பண்பாகு பெயராய்ப் பூமியை யுணர்த்த அது இடவாகு பெய

ராய்ப் பூமியிலுள்ள மனிதரை யுணர்த்தினமையின் இருமடியாகு பெயராம். கஜ+இந்திரன்—கஜேந்திரன்; குணசந்தி; யானைகளுக் குத் தலைவனென்பது பொருள். பரகதி—மேலானகதி; மோட்சம். ஏர்—அழகு; உ(ள்)ளம்—மனம்; வார் திரை—நீண்ட அலைகளை யுடைய தாமிரபரணி நதி. சீர்—மேன்மை; சிந்துரம்—புளியமரம்; "சீர்மிகு * * தேவே" என்றது நம்மாழ்வாரை.

2. செகதலம்—உலகம்; செறி—பொருந்திய; போற்றி செய்து—வணங்கி; தும்பியை பொருது—யானையோடு போர் செய்து; தும்பியை—உருபு மயக்கம்; மக பலம்—மிக்கவலிமை; மகாவென்பது மகவெனக்குறுகி நின்றது. வாரணம்—யானை; கக பதி ஊர்தி—பறவைகளுக்கு அரசனாகிய கருடனை வாகனமாக வுடைய திருமால்; ககம்—பறவை; ஊர்தி—ஏறிச் செலுத்து வோன்; ஊர்—பகுதி; த்—எழுத்துப்பேறு; இ—ஆண்பால் விகுதி.

சுகர் வியாசமுனிவரின் புதல்வரென்பதும், பரீட்சித் மன் னன் அர்ச்சுனன் மகனாகிய அபிமன்னன் புதல்வனென்பதும் இங் குக் கவனிக்க.

3. கியாதி—புகழ்; பாண்டு சேய்—பாண்டு மகாராஜன்புத்தி ரனாகிய தருமாராஜன்; நெறியுடன்—(பக்தியாகிய) கிரமத்தோடு; கேள்+மோ—கேண்மோ—கேட்பாயாக.

4. கன்னல்—கரும்பு; ஆல்—ஆலமரம்; காஞ்சிரம்—எட்டி மரம்; புன்கு—புங்கமரம்; தென் உருத்திராக்கம்—இனிய ருத் திராக்ஷ மரம்.

5. பரி—குதிரை; ஏனம்—பன்றி; கலை—ஓர்வகை மான்; கார்—கருமை; சே—எருது; ஒவ்விய கவிகள்—(மரங்களில்)பொரு ந்திய குரங்குகள்.

6. சக்கரவாகப் புள்—சக்கரவாக மென்னும் பறவைகள்; சிகி—மயில்; குக்குடம்—கோழி; கோகிலம்—குயில்; கிள்ளை— கிளி; கல்வி—ஊர்க்குருவி; கூகை—கோட்டான்.

7. ஆர்ப்பு—ஒலி; பறவை போகம்—பறவைகளுக்கு இன்ப மனுபவிக்க விடமாம். சாயும் சலதி—பெருகும் நதிகள்; தாரு—மரங்கள்; சருகு—உலர்ந்த இலைகள்; கலை சால தெரி முனிவர்—வேத சாஸ்திரங்களை மிகவும் ஆராய்ச்சி செய்யும் முனிவர்கள்; நிலையது ஆம்—நிலை பெற்றிருப்பதாகும்; நிகழ்த்துதல்—சொல்லுதல்.

8. பூரணம்—நிறைவு; மது பொழி—தேனைச் சொரிகின்ற; வாரணம் குழவி—யானைக் கன்று; விஞ்சி மதர்த்து—மிகவும் மதங் கொண்டு; தாரணி—பூமி; வெருவி—பயந்து; வாரணம் குழவி யென்றது கஜேந்திரனை.

9. சாடும்—அழிக்கும்; மின்—ஒளி.

10. பாரிய—பெரிய; பல்லூகம்—காடி; முழை—குகை; மகிடம்—எருமை.

11. கன்னல்—கரும்பு; கதலி—வாழை; அ நிலை—அவ் விடம்; கரிணி—பெண்யானை; இதன் ஆண்பால் கரி.

12. அல்லல்—துன்பம்; தந்தி—யானை; தந்தத்தை யுடைய தென்பது. தொல்லை நாள்—முற்பிறப்பு; தீமை—பாவம்.

13. பங்கயம்—தாமரை; பங்கம்—சேறு; ஜம்—முளைப்பது; சேற்றில்முளைப்ப தென்பது.பரிவாய்—அன்பாய்;அம் கயம் கரிணி—அழகிய பெண் யானைகள்; வாரி—தடாகம்; அங்கம்—உடல்; பொங்கமாய் களிப்பாய்; தும்பி ராசன்—யானைகளுக் கரசன்.

14. பின் வரும் கால்—பின்னங்கால்; நாடி—தேடி; வன் பெரும்கரவு—வலிய பெரிய முதலை; முன் தாள்—முன்னங்கால்.

15. மொத்திட—பலமாய்ப் புடைக்க;வெகுண்டு-கோபித்து.

16. பாடு—துன்பம்; நாடி—விரும்பி.

17. ஆளன்—கணவனாகிய கஜேந்திரன்; அத்தியின் குழாம்—யானைக் கூட்டம்; தாள் எழாது ஆக—காலெழாமல்; தய்ங்கி—மயங்கி; இன்னே—இப்பொழுதே.

18. ஈர்க்கும்—இழுக்கும்; வரை—மலை; உரைபட—தேய;

19. நாக ராசன்—கஜேந்திரன்; நாகம்—யானை; மலைகளில் வசிப்பதென்பது. ஆர்ப்பரித்து—பேரொலி செய்து; அப்பினை—நீரை; சூல் பெரும் பிண்டம்—கருப்ப மாகிய பெரிய பிண்டம்.

20. கடகம்—நண்டு; கூர்மம்—ஆமை. மண்டுகம்—தவளை; மச்சம் குழு—மீன் கூட்டம்.

21. கரா—முதலை; உ(ள்)ளம்—மனம்; வெற்பு—மலை; முறைமை செய்திடும் முறைமை—அரசாட்சி செய்யும் விதம்.

22. சுரும்பு—வண்டு; சுரம்—ராகம்; கதித்து உறும் கதலி—பருத்து வளரும் வாழைக்காய்; கரும்கரா—பெரிய முதலை.

23. கன்றி—(மனம்) வருந்தி; குன்றிடும்— ஒடுங்கும்; தலை நாளில்—முற்பிறப்பில்.

24. நூறு பத்து—ஆயிரம்; பூருவத்து உள ஞானம்—முற்பிறப்பலுள்ள ஞானம்; ஞானம்—அறிவு; திக்கு—ஆதரவு; சர்வ+ஈசன்; சர்வேசன்—எல்லாவற்றிற்குந் தலைவராகிய கடவுள்; நெறியை கொண்டு—நன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து; வினை—தீவினை; ஏக குணத்தினுல்—ஒரே தன்மையினுல்.

25. உருவம்—உருவமுள்ள பொருள்கள்; அருவம்—உருவமில்லாத பொருள்கள்;(மனம்,காற்றுமுதலியவை.)ஒருமை—ஒன்று; இருமை—பல; மரு—வாசனை; மதுரம்—இனிமை; குரு—அஞ்ஞானத்தைப் போக்குகிறவன்; கோவே—கடவுளே;

26. மருவி—பொருந்தி; வனம் ரூபம்—நீரின் வடிவம்; இனன்—சூரியன்; சசி—சந்திரன்; திரை எறி கடல்—அலைகளை வீசுங் கடல்; தனயன்—பிள்ளை;தமர்—உறவினர்;அனையும்—எல்லாமும்; அனை—அத்தனை யென்பதன் மரூஉ; பரம் ஆனவன்—மேலானவன்; அ+பயம் அபயம்—பயமில்லாமை; அபயம் மெனும்—மகாரம் விரித்தல் விகாரம்.

27. வலை படு கயல்—வலையி லகப்பட்ட கெண்டைமீன்; கோன்—அரசன்; இங்கே சேனைத்தலைவன். கொம்பு—இளங் கொடிகள் தன்மேல் படரும் படி அவற்றைத் தாங்குங் கொம்பு;

இதனைக் கொள்கொம் பென்பர். ஊர்வது—நகர்ந்து செல்வது; பத்துடை யடியவர்க் கெளியனாய் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றுதல் கடவுளின் குணமாகையால் 'நின்னடிமைக் கடிமையாய்' வந்து என்றார்.

29. மும்மலம்—மூன்று வகையாகிய மலங்கள்; அவை—ஆணவம், காமியம், மாயை; உற்பவித்து—பிறந்து; கற்பனை நிலையே—கற்பனைகளுக்கு இருப்பிடமே! அற்புதம் பொருள்—ஆச்சரியமான கடவுள்.

30. கள்ளமாகி—வஞ்சனையாய்; கடிந்து—கோபித்து; கரவு—முதலை; இசைந்து—பொருந்தி; புறம்பு—வெளி.

31. ஒருமையான யோகியர்—(மனத்தை) ஒரு வழியிற் செலுத்தின யோகியர்; மெய்யுரை—மெய்ம்மையாகிய வார்த்தை; சத்திய வாக்கு.

32. அந்தரம்—ஆகாயம்; அண்ணாந்து—நிமிர்ந்து; சிந்தனை பண்ணும்—துதிக்கும்.

33. பரிதி—சூரியன்; முக்கண் சங்கரன்—மூன்று கண்களையுடைய சிவபிரான்; அயன்—பிரமன்; முறை—கதறும்ஒலி; எந்தடைவு—எந்த+அடைவு; நிலைமொழியில் அகரங் கெட்டு நின்றது; எந்த ஆதாரம் (இருக்கிறது).

34. இறைஞ்சி—வணங்கி; மை படி கண்டன்—நீலகண்டராகிய சிவபிரான்; வாசன்—இந்திரன்: இடர்—துன்பம்; இபம்—யானை; செப்பம்—நடுநிலைமை; இங்கே இரக்கமென்னும் பொருள் பட நின்றது; உரைமின் சொல்லுங்கள்.

35. துங்கம்—பரிசுத்தம்; சுடர் முடி—ஒளியை யுடையமகுடம்; சங்கை—சந்தேகம்; அத்தி—யானை; நாட—தேட; விரும்ப. அங்ஙன் - அவ்விதம்; அரைய லுற்றான்—சொல்லத்தொடங்கினான்; அமலன்—பரிசுத்தன்; பகவான்—அறுவகைக் குணங்களை யுடையவன்; அவை ஞானம், பலம், ஐஸ்வரியம், வீரியம், சக்தி, தேஜஸ்; பகம்—ஆறு. சென்ம நாமம் இல்லவன்—உருவமும் பேருமில்லா

தவன்; அநகன்—பாவமில்லாதவன்; அகம்—பாவம். வித்தகன்—ஞானமுள்ளவன்; சர்வ சரணியன்—எல்லோராலும் வணங்கப் படுகிறவன்.

36. நித்தன்—எப்போது முள்ளவன்; அழியாதவ னென்பது; முனிகள்—மனனசீலர்; கடவுளை யெப்போதுந் துதிப்பவர். கடவுள்—(இயல்பாகவே பாசங்களை) கடந்தவன்; கருணாகரன்—கருணைக்கு இருப்பிடமானவன்; கருணா+ஆகரன்; ஆகரம்—இருப்பிடம். கதி அருள் தே ஆய்—மோக்ஷத்தைத் தருங் கடவுளாய்; விமலன்—பரிசுத்தன்; மலம்—அழுக்கு. வியாபகன்—(எங்கும்) நிறைந்தவன்; சுருதி பாராயணன்—(வேதங்களால்)துதிக்கப் படுகிறவன்; அத்தன்—கடவுள்; உலோக நியாமகன்—உலகத்திலுள்ள உயிர்களுக்குக் கட்டளை யிடுபவன்.

37. படிவம்—உருவம்; அப்பு—நீர்; கால் - காற்று; வெளி—ஆகாயம்; பூ—பூமி;மும்மூர்த்தி—மூன்று தேவர்கள்; அடிகள்—கடவுள்; அமுறை—அக்கூக்குரல். அரி—விஷ்ணு; (எல்லாரையும் அழிப்பவன்). ஆதிமூலம்—(எல்லாவற்றிற்கும்) முதன்மையாகிய மூலகாரணப் பொருள்.

38. பங்கயம் திரு-செந்தாமரை மலரில் வசிக்குந் திருமகள்: பணி முடி நிழல்—ஆதிசேஷனது படத்தின் நிழல்; இங்கிதம்—நன்மை; பாதசாரியாய்—காலால் நடப்பவனாய்; கடுகி—விரைந்து.

39. மச்சரம்—விரோதம்; அச்சுதன்—அழிவில்லாதவன்; பச்சை மேனியன்—கரிய திருமேனியை யுடையவன்; முதிர்ந்த பசுமைக்கும் கருமைக்கும் அதிக வேறுபாடு தோற்றாமையால் இவ்வாறு கூறினர். 'பச்சைமா மலைபோல் மேனி' என்றார் பெரியாரும்;'மையோமர தகமோமறி கடலோமழை முகிலோ'எனக்கம்பரும், 'மரத கப்புயல் தனையெடுத்தொரு மகவென'எனவில்லிபுத்தூராருங் கூறினமையுங் காண்க.

40. முன்தானை — துணியின் முன் பக்கம்; நுனிப்புறமென்பது. தானை முன்னென்பது—முன்தானை யென மாறி நின்

றமையால் இலக்கணப்போலி; தானை—துணி; புதுமை—அதிசயம்; அறிதும்—அறிவோம்; மாதவன்—திருமகளுக்குக் கணவன்; மா—திருமகள்.

41. முடியவிழ் கோசம்—தலையில் அவிழ்ந்தமயிர்; குறு வேர்வை—சிறிய வேர்வைத்துளிகள்: இணை அடி—இரண்டு பாதங்கள்; குழைய—(சிவந்து) கனிய; மெய்—உடம்பு; மங்கல வழக்கு. அணி மணியாரம்—அணிந்த ரத்தின மாலை; அணி—அழகெனினுமாம். கொடி இடை துவள—பூங்கொடி போன்ற இடுப்புத் தளர; நீலம் கொண்டலின் மின்னல்—கரிய மேகத்தில் தோன்றும் மின்னல்; கொண்டல்—மேகம்; நெடியவன்—(யாவரினும்) உயர்ந்தவன்; இது திரிவிக்ரமாவதாரத்தைக் குறிக்கும்; நேரிழை—செவ்வையாகிய ஆபரணங்களை யணிந்த திருமகள்: பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

42. அந்தரத்து ஒரீஇ—தேவலோகத்தினின்று நீங்கி; திரு அமரர்—அழகிய தேவர்; உம்மைத் தொகையாகக் கொண்டு திருமகளும் தேவர்களுமெனினுமாம்; அமரர்—அ+மரர்—மரணமில்லாதவ ரென்பது. நந்து—சங்கு; ஞாயிறு ஆம் திகிரி—சூரியனைப் போன்ற சக்ராயுதம்: ஆம்—உவம உருபிடைச்சொல்; திருமாலின் சங்கத்தைப் பாஞ்சஜன்னிய மெனவும், சக்ராயுதத்தைச் சுதர்சன மெனவுங் கூறுவார். அனந்தன்—ஆதிசேஷன்; 'நித்திய வைகுந்த மேவிய பெயர்கள்' என்றது நித்திய சூரிகளை.

43. ஆயன்—கண்ணபிரான்; இடையர் குடியிற்பிறந்தவனென்பது; ஆயம்—நிரை; ஆயர்—பசுக்கூட்டத்தை யுடையவராதல் பற்றி இப்பெயர்வந்தது; அச்சுதன்—அழிவில்லாதவன்; அமலன்—பரிசுத்த மானவன்; நேயன்—அன்புள்ளவன்; நிருபன்—தலைவன்; தூயன்—பரிசுத்தன்; சென்னி—தலை; சரண்—அடைக்கலம்.

44. பல்லாண்டு இசைத்து—பலவருஷங்கள் வாழ்வாயாக வென் வாழ்த்தி; நந்தன்—சங்கை யுடையவன்; நந்து—சங்கு; பிரளயம்—வெள்ளம்; தேவர்களும் முனிவர்களும் நெருங்கித்

திரண்டு சென்ற கூட்டத்தின் மிகுதியைக் கருதிப் பிரளய மென்ஞர்.

45. செம் கண் மால்—செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய திருமால்; செழும் தூரம்—அதிக தூரம்; தும்பி—யானை; கோடி செம் கதிர் திரள்—கோடிக்கணக்கான சூரியர்களின் கூட்டம்; தேசு—ஒளி; இது தேஜஸ் என்னும் வடமொழியின் சிதைவென்பர். முத்தி மங்கை நாயகனெனக் கூட்டுக; மோக்ஷமாகிய பெண்ணுக்குத் தலைவன்; முத்திக்கும் திருமகளுக்குந் தலைவனெனினுமாம்.

46. மண் தலம்—பூமி; மாதிரம்—திக்குகள்; துளங்கிட—அசைய; கும்பி—யானை; ஆழி—சக்கரம்

47 சிதரன்—திருமால்;ஸ்ரீ+தரன்;திருமகளை மார்பில் தரித்தவன். ஈசானன்—சிவபிரான்; வடகிழக்குத் திசைக்குத் தலைவன். சீதள சலதி—குளிர்ந்த கடல்; மலரின் மாரி—பூ மழை; பண்புத் தொகை; இன்—அல்வழிச் சாரியை.

48. பல் இயங்கள்-பல வகை வாத்தியங்கள்: வாரணம்—யானை.

49. நிலையற்று—நிலைபெறுத லில்லாமல்.

50. அரி மலர் கை — வண்டுகள் படிந்த தாமரைமலர் போன்ற கை; அரி—கீற்றெனினுமாம்; நீடிய—நீண்ட.

51. அடைவு—அன்பு; முறைமை. புளகம்—(பக்தி மிகுதியால் உடம்பிலுள்ள) மயிர் சிலிர்த்தல்;ஓங்காரம் செய்து—பிரணவ மந்திர முச்சரித்து.

52. சுரர் பதி—தேவர்களுக்குத் தலைவனுன இந்திரன்; பரிபவ குணங்கள்—(அடியார் விஷயத்திலுள்ள) எளிய குணங்கள்; துதிக்கலுற்ருன் என்னும் பயனிலைக்கு இந்திரத் தூய்மனென்னும் எழுவாயை விருவித்துரைக்க.

53. பகடு—யானை; காலன்—யமன்; உயிர்களின் ஆயுள் கால மறிந்து அவற்றை யழிப்பவனென்பது. கண்டகத்து உறை

யும் இந்த கண்டகன்—காட்டில் வசிக்கும் இந்தக்கொடியவன்; கண்டகம்—முள்; கண்டகன்—முள் போல் பிறர்க்குத் தீங்கு செய்பவன்.

54. வரதன்—(தன்னடியார் விரும்பும்) வரங்களை யளிப்பவன்; அனந்த வெய்யோன்—அழிவில்லாத சூரியன்.

55. இறைஞ்சி—வணங்கி; அறம் திரு நாதன்—தருமத்தினது வடிவமாகிய திருமகள் கணவன்; திரு அற நாதன் என மாற்றி அழகிய தரும சொரூபியாகிய திருமாலெனினுமாம்; 'அறவாழி யந்தண'னென்றார், நாயனாரும். அரி ரூபான நிறந்தனை—விஷ்ணுவின் வடிவமான திருமேனியை; ரூபம் என்பது அம் கடைக்குறைந்து ரூபு என நின்றது. மோக்ஷம்—(பந்தத்தினின்றும்) விடுபடுவது. வீடு என்னும் தமிழ் மொழியும் இப்பொருள் குறிப்பதாம்.

56. கந்தருவர்—தேவர்களில் ஒரு வகுப்பார்; இவர்கள் வீணை வாசிப்பதில் வல்லவர். எத்தி—துதித்து; அலர் மகள்—தாமரைமலரில் வசிக்குந் திருமகள்: திரம்—நிலை; ஸ்திரமென்னும் வடமொழிச் சிதைவு. தேவர்கள் வாழுகின்ற புரம்—அமராவதி நகரம்; புரம்-நகரம். ஊகூ என்பான்—ஊகூ என்று சொல்லப்பட்ட கந்தருவன்.

57. தொனித்து—முழக்கி; சார்ங்கபாணி—சார்ங்கமென்னும் வில்லைக் கையி லுடையவனாகிய திருமால்: இணையில்—சமானமில்லாத; தானம்—இருப்பிடம்; ஸ்தானமென்னும் வடமொழி விகாரப்பட்டது; பொங்கமாய்—பொலிவாய்; புகன்றனர்—சொன்னார்,

58. எட்டு திசையி லுள்ளோர்—எட்டுத் திக்குப் பாலர்கள்; பூ உலகு—பூலோகம்; பொதுவர்—இடையர்; சயம்—வெற்றி.

## திரி கடுகம்.

இதன் ஆசிரியர் நல்லாதனார். இவர் இந்நூலின் தற்சிறப்புப் பாயிரச் செய்யுளில் "கண்ணகல் ஞால மளந்ததூஉம் காமருசீர், தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉவும், நண்ணிய—மாயச் சகடமுதைத்ததூஉம் இம்மூன்றும், பூவைப்பூ வண்ணன் கழல்" எனக்

கண்ணபிரானைத் துதித்துள்ளமையால், இவர் வைஷ்ணவரென்பது நன்கு விளங்கும். இவர் கடைச்சங்க காலத்தில் இதனையியற்றினமையால், இவர் காலம் சுமார் 1800 வருஷங்களுக்கு முற்பட்டதென்பர்.

திரிகடுகம். மிளகு, சுக்கு, திப்பிலி என்னும் இம்மூவகைச் சரக்குகளால் செய்யப்பட்டதோர் மருந்துபோன்ற நூல் என்பது பொருள். இம்மருந்து தன்னையுண்டாரது உடலிலுள்ள வியாதியைப் போக்கி அவர்களுக்கு நன்மை யளிப்பது போல், இந்நூலுந் தன்னைக்கற்றாரது மனத்திலுள்ள அறியாமையைப் போக்கி அவர்களை நல்வழியில் செலுத்துமென்பது; திரிகடுகம் மூவகைச்சரக்குகளாலானதுபோல் இந்நூலின் ஒவ்வொரு செய்யுளும் மும்மூன்று விஷயங்களையே குறிக்குமென்பதும் இங்குக் கருதத் தக்கதாம்.

நூல்.

1. வான் புகழ்—உயர்ந்த புகழ்; நட்டான்—நிலை நிறுத்தினவன்; கூவல்—கிணறு; தொட்டான்—தோண்டினவன்; எய்தினார்—அடைந்தவர்.

2. ஆசை—செல்வம்; பிறன்—நல்லவனல்லாதவன்; தீயோனென்பது. பாசம்-அன்புடைய சுற்றத்தார்; மடியை கொ(ள்)ளல்—சோம்பலைக் கொள்ளுதல்; கதித்து—பருத்து வளர்ந்து; எள்ளப்படுதல்—இகழப் படுதல்; இன்னாதன—துன்பந்தருவன.

3. என் பெறினும்—எவ்வகையாகிய உயர்ந்த பொருள்களைப் பெற்றாலும்; பால் பற்றி—(சாட்சியாகும் போது) ஒரு பக்கம் சார்ந்து; சாயினும்—அழியினும்; சான்று ஆண்மை—(பல நற்குணங்களும்) நிறைந்து (அவற்றை) ஆளுந் தன்மை; தூஉயம்—பரிசுத்த முடையோம்.

4. தன் நச்சி சென்றார்—தன்னை விரும்பி அடைந்தவர்; எள்ளா—இகழாத; பொச்சாப்பு—(பழைய சிநேகம் முதலியவற்றை) மறத்தல்; நீத்தான்—ஒழித்தவன்; அழுக்காறு இகந்தான்—பொறாமையை ஒழித்தவன்.

5. வியந்து—புகழ்ந்து; தருக்கல்–கர்வமடைதல்;வெகுளி—கோபம்; கொன்னே—வீணாய்; தாழ்வு இன்றி பெருக்கல்—தணித்தலில்லாமல் அதிகப்படுத்தல்; முன்னிய—எண்ணிய; வெஃகும் சிறுமை—விரும்பும் இழிவாகிய குணம்; உடைக்கும் படை—அழிக்கும் ஆயுதங்களாம்.

6. வைத அதனை—(பிறர்) நிந்தித்த அம்மொழிகளை; பெய்த—ஊற்றிய; கைப்பு அதனை—கசப்புள்ள பொருள்களை; கட்டி—வெல்லக்கட்டி; மெய் பொருள்—மெய்யாகிய கடவுள்.

7. கிளைஞர்—உறவினர்; பை கூழ்—பசுமையாகிய பயிர்; போற்றாதான்—காப்பாற்றாதவன்; குடிமை—உயர்வாகிய குடியிற் பிறத்தல்; இளையன்—(அறிவில்) சிறியவன்.

8. நிறை நெஞ்சு உடையான்—(கிடைத்த வரையில்) திருப்தியடையும் மனமுடையவன்; நல்குரவு—தரித்திரம்; அறன்—தருமம்; அல் பொருள்—தருமமல்லாத பொருள்; பாவமென்பது. மறவன்—வீரமுள்ளவன் ; திறவது இல்—வலிய பொருள்களில்; தீர்ந்த பொருள்—முடிந்த பொருள்களாம்.

9. அடை கொடாதான்—(வந்து) சேர (இடம்) கொடாதவன்; துவ்வான்—அனுபவியாதவனாய்; இறந்து—(வரம்பு) கடந்து; இன்னா சொல்கிற்பான்—இனிமையல்லாத கொடுஞ் சொற்களைச் சொல்பவன்.

10. காமுற்ற—(தான்) விரும்பியவற்றை ; பெட்டாங்கு—விரும்பினாற்போல; ஒழுகும்-நடக்கும்; முட்டு—தடை; அல்லவை-தகுதியல்லாத காரியங்கள் ; அலவலை—ஆரவாரச் சொற்களையுடையவன்.

## நான்மணிக் கடிகை.

இதன் ஆசிரியர் விளம்பி நாகனார்என்பவர். இவர் இந்நூலின் தற்சிறப்புப் பாயிரச் செய்யுளில், 'மதிமன்னு மாயவன் வாண்முகமொக்கும்' என்னுஞ் செய்யுளால் திருமால் விஷயமாய் வணக்கங் கூறியுள்ளமையால், இவர் வைணவரென்பது இனிது புலப்படும்.

இது கடைச்சங்க மேறிய நூல்களில் ஒன்றாம். இவர்காலம் சுமார் 1,800 வருடங்களுக்கு முற்பட்டதென்பார்.

நான்மணிக் கடிகை — நான்கு ரத்தினத் துண்டுகளால் அமைந்ததோராபரணம் போன்ற நூல் என்பது பொருள்; மணி—ரத்தினம்; கடிகை—துண்டு. அவ்வாபரணம் தன்னை யணிந்தோரை அழகு பெறச்செய்வது போல் இந்நூலுந் தன்னைக் கற்றோரைத் தீயவழியினின்றும் விலக்கி நல்வழியிற் செலுத்தி அவர்களை அழகு பெறச் செய்யுமென்பது. முற் கூறிய ஆபரணம் நான்கு மணிகளாலாகியது போல் இந்நூலின் ஒவ்வொரு செய்யுளும் நந்நான்கு பொருள்களையே குறிக்கு மென்க.

## நூல்

1. கள்ளி வயிறு—கள்ளிச் செடியின் நடுவிடம்; நடுவிடத்தை வயிறு என்றது இலக்கணை; 'குன்றின் நெஞ்சுபக வெறிந்த அஞ்சுடர் நெடுவேல்' என்றார் குறுந்தொகையிலும். பல் விலைய முத்தம்—மிக்க விலையுள்ள முத்துக்கள்; நல்ஆள்—நற்குண நற்செய்கைகளை யுடையானொருவன்.

2, களிறு—யானை; கந்து—(யானையைக் கட்டும்) தூண்; பிணிப்பர்—கட்டி யடக்குவார்; கதம்—கோபம், கயம்—கீழ்மக்கள் ; கொந்தி—கொத்தி ; வருத்தி; சான்றோரை—பெரியோரை; நயம்—இனிய சொற்கள்.

3. கடிய—(பிறர் தனக்குச் செய்த) தீச் செயல்களில் ; கன்றாமை—மனம் வருந்தாமை ; கொல்லா(து)—மறவாமல் கொ(ள்) ளல்; நினைவில் வைத்துக் கொள்ளுதல்; வெகுளி—கோபம் ; ஆக்கம் சிதைக்கும் வினை—செல்வத்தை யழிக்குந் தீத்தொழில்கள்; அடல்—அழித்தல் (ஒழித்தல்).

4. பண் அமையா யாழ்—நரம்பினால் கட்டுத லமையாத வீணை யோசை: பண்—இராக மெனினுமாம். நிறை—(மனத்தை) நல்வழியில் நிறுத்துதல்: பீடு—பெருமை; மாந்தரின்—ஆண்மக்களைக் காட்டினும்; பண் அழிந்த ஆர்தலின்—பதமழிந்த பதார்த்

தங்களைத் தின்பதைவிட; பசைந்தாரின் தீர்தலின் -- உள்ளன்புடையாரை விட்டு நீங்குதலைவிட.

5. மொய் சிதைக்கும்—வலியை யழிக்கும்; பொன்போலும் மேனியை—பொன் போன்ற (அழகிய உடலின்) நிறத்தை; கூடார் கண்—சிநேகஞ் செய்யத் தகாதவரிடம்; கலம்—பாத்திரம்.

6. திரி அழல்—திரிக்கப் பட்ட நூலாலேற்றிய விளக்கு; எரி அழல்—எரிகின்ற நெருப்பு ; மூத்தான்—(வயதில்) பெரியவன்; உலகு பாராட்டும்—உலகத்தி லுள்ளார் உயர்வாய் மதிப்பார்.

7. கைத்து—பொருள்; வைத்தார்—(தானும் உண்ணுமல் பிறர்க்கும் கொடாமல் பொருளை) சேர்த்து வைத்தவர்;வறியவர்—ஏழைகள்; பைத்து—கோபித்து.

8. வலிகள்—வன்மை யுள்ளவைகள்; தாவாத—அழியாத; மூவாது இளமை இயைந்தாரும் இல்லை—கிழப்பருவ மடையாமல் இளமைப்பருவம் நிலைக்கப் பெற்றவருமில்லை: வளமை—செல்வம்; கேடு— அழிவு.

9. வளம் இலா(த)பொழ்தத்து—செல்வமில்லாத காலத்தில்; வள்ளன்மை—பிறர்க்குக்கொடுக்குங் குணமுடமை; கிளைஞர் — பந்துக்கள்; தமர்—உள்ளன்புடையார்; கைத்து உள்ளது—இடத்திலுள்ள உணவு; ஊண்—உண்ணுதல்.

10. மடவார்—(நற்குண நற்செயல்களை யுடைய) பெண்கள்; மடமை—இளமை, அறியாமை. தகை சால்—நற்குணம் நிறைந்த; இனிய காதல்—சிறந்த அன்பு; ஓதில்—சொன்னல்; புகழ் சால் உணர்வு—புகழ்நிறைந்த அறிவு.

## தண்டலையார் சதகம்.

இந்நூலை யியற்றியவர் படிக்காசுப் புலவர். இவர் தொண்டை மண்டலத்திலுள்ள பொற்களத்தூரில் பிறந்து தமிழை நன்கு கற்றுத் தேர்ந்தனர். இவர் சிதம்பரத்தையடைந்து ஆங்கு வீற்றிருக்கும் நடராஜப் பெருமானையும் சிவகாமி யம்மையாரையும் சில

பாடல்களால் துதிக்க, அங்கே சிவபெருமான் தமது கருணை மிகு தியால் பஞ்சாட்சரப் படியில் ஐந்து பொற்காசுகளை வைத்தருளி னர். அவற்றை யிவர்மிக்க அன்போடு ஏற்றுக் கொண்டமையால் இவர்க்கு இப்பெயர் வந்ததென்பர். இதற்கு முன்பு இவர்க்குள்ள பெயர் இன்னதென விளங்கவில்லை. இவர் பலதனவான்களைப் புகழ்ந்து பரிசில் பெற்றனர். இவர் புள்ளிருக்கு வேளூர்க் கலம் பகம், தொண்டை மண்டல சதகம் என்னும் நூல்களை யியற்றினர்.

## நூல்.

1, நன்றி தரு—(பிறர்க்கு) உதவி செய்யும்; நன்றி—புண் ணியச் செயல்களுமாம். ஆவது—பயன் தருவது; மன்று—சபை; குஞ்சரம்—யானை.

2. துப்பு இட்ட—மேன்மை பொருந்திய தோற்றம்;—காட்சி; செப்பிட்ட—(நீதி நூல்களில்) சொல்லப்பட்ட; கொப்பு—காதணி; உமை பாகர்—பார்வதி தேவியை இடது பாகத்தி லுடைவர்.

3. சங்கை அற—சந்தேகம் நீங்க; உறுதி—உண்மைநூற் பொருள்கள்; அம் கண் உலகு—அழகிய இடமகன்ற உலகம்;கதி—நற்கதி; திங்கள்—சந்திரன்.

4. போதம்—அறிவு: ஈதல்—தானம் பண்ணல்: இரக்கம்—கருணை; காதவழி—காத தூரம்; காதம்—பத்துமைல்; ஒக்கும்—சமானமாவான்.

5. வேடம்—குண்டலம்; தாழ்வடம்—(ருத்திராக்ஷ) மாலை; காவடம்—வஞ்சனை; வேடம் ஆமோ—வேஷம் தகுமோ; வாது—(பிரமனுக்கும் திருமாலுக்கும் நேர்ந்த) வழக்கு; அயன்—பிரமன்; மௌனம்—வாய்திறந்து பேசாமை; இங்கே அவ்வாறிருக்கும் யோகிகளைப் போல் நடித்தலைக் குறித்தது.

ருத்ராக்ஷப்பூனை:—ஒருகாலத்தில் ஒருபூனை மிகுந்த பக்திமா னைப்போல் நாள் தோறும்அதிகாலையி லெழுந்து கங்கையில் நீராடி விபூதியும் ருத்திராக்கமுமணிந்து அரகர! சிவ சிவ! வெனமுழக்கிச்

சிவபிரான் திறத்துப் பேரன்புள்ளதைப்போல் நடித்தது. அதைக் கண்ட அக்காட்டுப்பறவைகள் அதனைப் பெரிதும் நம்பி ஏமாந்திருந்தன. அப்போது, அக்கொடிய பூனை அங்குள்ள பறவையினங்களை நாளடைவில் அழித்து விட்டது. இங்கே ருத்ராக்ஷப் பூனையென்றது அப்பூனையைப் போல் நம்பிக்கைத் துரோகம் செய்பவனென்பதைக் குறிக்கும்.

6. நால் கவி—நான்கு வகையாகிய கவிகளை யியற்றவல்ல புலவர்கள்; அவை:—ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம். வண்மை—வளப்பம்; தீர்க்கம்—சிறந்த ஆலோசனை.

7. ஊற்றுள்ள பொருள்—நீரூற்றைப்போல் சுரக்கும் பொருள்; கூற்று—யமன்; உள்ளம் மலைய—மனம் நடுக்கங்கொள்ள; குடபால் வீசும்—மேற்குத் திசையில் வீசும்.

8. வைதிடினும்—(பிறர்) பழித்தாலும்; வாழ்த்திடினும்—புகழ்ந்தாலும்; கோடி வம்பு—பல தீங்குகள்; மெய்—உண்மை; நாடி—ஆராய்ந்து. எய்தவர்—(அம்பை) தொடுத்தவர்; இயம்புவீர்—சொல்வீர்.

9. மெய் அதனில்—உடம்பில்; பதம்—பக்குவம்; தகுதி.

10. விற்பனர்—அறிவுடையோர்; கண்ணோட்டம்—தாக்ஷிணியத்தை; சொற்பர்—அற்பர்; இறுமாந்து—கர்வங்கொண்டு; பண்பு—குணம்; அர்த்த ராத்திரி—பாதி யிரவு; நடுராத்திரி யென்பது.

11. இங்கிதம்—இணக்கம்; தகுதி; நிருபர்—அரசர்: உசிதம்—மேன்மை; தகுதி; குழறிப் பேசுதல்—தடுமாறிப் பேசுதல்.

12. உன்னிடினும்—நினைத்தாலும்; உரைத்திடினும்—சொன்னாலும்; தென்னவன்—பாண்டியன்; தன்னை சுட—தன்னை வருத்த; வீட்டை சுட—வீட்டைக் கொளுத்த.

13. எழு நூறு நன்றி—பல உதவிகள்; தீது—குற்றம் ; பழி கருமம் கயவர்—பழிக்குந் தொழிலை யுடைய கீழ்மக்கள்; வித்தகம்—ஞானம்.

## தனிப் பாடல்.

### வெண்டாமரையாள் மாலை.

1. ஆக்கும் தொழில் கு இறையோன்—படைப்புத் தொழிலுக்குத் தலைவனாகிய பிரமன்; எழில் நா—அழகிய நாக்கு; தால்—நாக்கு; காலமென்பது காலெனநிற்றல் போல் தாலமென்பது தாலெனக் கடைக்குறைந்து நின்றது; குவலயம்—உலகம்; நுவல—சொல்ல; வெண் தாமரை அன்னமே—வெண்மையாகிய தாமரை மலரில் எழுந்தருளியிருக்கும் அன்னம் போன்ற சரஸ்வதி தேவியே.

2. அறையும்—(உயர்வாக) சொல்லப்படும்; வீடு—மோட்சம்; எய்தும்—(வந்து) கூடும்; அழுக்காறு—பொறாமை; தறை—தரை; எதுகை நோக்கி வந்தது. சால்பு உறு—மேன்மை பொருந்திய; நூபுரம்—காலிலணியும் ஓர்வகை யாபரணம்; அரற்றும்—ஒலிக்கும்.

3. நயந்து—விரும்பி; எத்திலன்—துதித்திலன்; தராதலம்—உலகம்; வான்—மேகம்; இடவாகுபெயர். வையம்—பூமி; மானேர் விழியாய்—மான் போன்ற கண்களை யுடையாய்; சத தளம்—நூறு இதழ்கள்.

### முடி சூட்டு வாழ்த்து.

4. சீர் ஆர் பதுமம் திருமகள்—சிறப்புப் பொருந்திய செந்தாமரையில் வசிக்கும் இலக்குமி; செய்யோர்—செம்மை யாகிய குணங்களையுடைய கல்விமான்களின்; நாவில் உறை மகள்—நாக்கில் வசிக்கும் சரஸ்வதி தேவி; நிலவ—விளங்க; ஏர் ஆர்—அழகு பொருந்திய.

5. புரிந்த—செய்த; வந்தவர்—பிறந்தவர்; மன்ன—நிலைபெற; இசை இலகு—புகழால் விளங்கும்: கீர்த்தி—மேன்மை; திகழும்—விளங்கும்; இகழ்வு இல்—அவமதிப்பில்லாத, வண் சொல்—வளப்பமாகிய செய்யுள்களெனினுமாம்.

6. மாற்றார்—பகைவர்; நால்+தோள்—நாற்றோள்; "நாற்றோள் மறைத்தே...வந்தனர்" என்றமை திருமாலே எட்வர்ட்டாகப் பிறந்தானென்பது; உளத்தார்—மனமுடையவர்: நோற்று—தவஞ்செய்து; நொய்யோர்—அற்பராகிய தீயோர்.

7. இம்பர்—இவ்வுலகத்திலுள்ளவர்; இடவாகு பெயர்: கொணர்ந்தாய்—கொண்டு வந்தாய்; பாண—பாடகனே! பாணி—பாடினி; வம்பதாம் களபம்—வாசனையுடையதாகிய கலவைச் சந்தனம்; களபம்—யானை; மா+தங்கம்—சிறந்த பொன்; மாதங்கம்—யானை; சீர்பம்பு வேழம்—சிறப்பு நிறைந்த கரும்பு; வேழம்—யானையுமாம். பகடு—எருது, யானை; பழனம்—வயல்; கம்பு+அம்+மா—அழகிய கம்புமாவு: அம்—சாரியை யெனினுமாம்; கம்பம்+மா—தூணில் கட்டப் படும் யானை; கைம்மா—துதிக்கையை யுடைய மிருகம்; யானை.

ஒருபுலவன் ராமனைப் பாடி யானையைப் பரிசிலாகப் பெற்றுச்செல்ல, அவன் மனைவி அவனைநோக்கி நீ இராமன் மேல் கவி பாடி யாது பரிசு பெற்றாயென, அவன் களபம், மாதங்கம், வேழம், பகடு, கம்பமா வென, அவள் அவன் கருத்தை யறியாது, அவற்றிற்கு வெவ்வேறு வகையாய்ப் பொருள் கொள்ளக் கடைசியில் அவன் கைம்மாவெனவே அவள் யானை யென்றறிந்து, 'உணவின்றி வருந்தும் நாம் இவ்யானையைக் காப்பதெவ்வாறு?', என வருந்தினதாக இராமனென்பவனை அந்தகக்கவி வீரராகவ முதலியார் புகழ்ந்து பாடினர்.

8. வைரவன் வாகனம்—நாய்; பார் ஆரும்—பூமியில் வசிக்கும்; நான்முகன் வாகனம்—அன்னம், சோறு; நாராயணன் உயர் வாகனம்—திருமாலின் சிறந்த வாகனமாகிய கருடன்; வாகனமாயிற்று—கருடனைப்போல் பறந்தோடி விட்டதென்பது. மை வாகனன்—ஆட்டை வாகனமாக உடைய அக்கினி தேவன்; மை வாகனன் பற்றினன் என்றது பசி அதிகரித்ததென்பது.

9. முதிய கடல்—பழைய திருப்பாற்கடல்; கமலம்—தாமரை; தலை நால் சாமி—பிரமன்; தடவரை—பெரிய மலை; தகப்பன் சாமி—முருகக் கடவுள்; வயிற்றுச் சாமி—விநாயகர்; மயிலை—மயிலாப்பூர்; உதவிய—பெற்ற; உசிதவேளே—சிறந்த மன்மதனைப் போன்றவனே.

10. எறியும் மறன்—வெட்டும் வேடன்: புலி ஏறு—ஆண் புலி; கும்பல் தோள்—மெலிந்த தோள்; வள்ளல்—ஈகைக் குண முடையவன்.

11. செம் சொல்—இனிய சொற்களாலாகிய செய்யுள்கள்; வேடன்—கண்ணப்ப நாயனார்; பஞ்சவரில் ஒருவன்—பாண்டவர்களில் ஒருவனாகிய அர்ச்சுனன்.

12. வெம்+காயம்—கொடிய தேகம்; சுக்கு ஆனால்—(உபவாசங்களால்) சுக்குப் போலுலர்ந்தால்; வெம்+தயம்-கொடிய தீவினை; இ சாக்கை—(பாரமாகிய) இவ்வுடலை; சீர் அகம்—சிறந்த மோட்சமாகிய வீடு; பெரும் காயம்—தூல உடம்பு; ஏரகத்து செட்டியார்—திருவேரகத்தில் எழுந்தருளி யிருக்கும் முருகக்கடவுள்.

13. மேலாடை—உயர்வாகிய ஆடை: மேலே யணியத்தக்க ஆடை யெனினுமாம்; மேதினியோர்—பூமியிலுள்ளவர்; பொன் ஆடை—பீதாம்பரம்; ஆலாலம்—ஆலகால விஷம்.

## இரங்கற் பாக்கள்.

14. முன் நாட்டு தவ முனி—முன்னதாகச் சொல்லப்படும் தவத்தையுடைய அகஸ்திய முனிவர்; தென் நாட்டு மலை—பாண்டிய நாட்டிலுள்ள பொதியமலை; பொன் நாட்டு புலவர்—தேவலோகத்திலுள்ள தேவர்கள்; புகலுவாய்—சொல்வாய்.

15. பூமாது—திருமகள்; புவி மாது—நிலமகள்; நா மாது—சரஸ்வதி; நாவலர்—நா வன்மையுடைய புலவர்கள்; கோமான்—தலைவன்; புலமை—கல்வி.

16. வெற்பு—மலை; அடங்கினர்—மறைந்தனர்.

17. பூ கற்பகம் கா=அழகிய கற்பகச் சோலை; பூ—மலர்களெனினுமாம்; கரிக்கு—கரியின் பொருட்டு.

18. கலைமகள்—சரஸ்வதி; கா—சோலை; விற்பனம்—சொல்வன்மை; சுகிர்த குணம்—இனிய குணங்கள்; சனதா—கடிதம்; விலட்சணன்—அழகை யுடையவன்; மல்—மற்போர்; மால்—திருமால்; கா மா—சோலையிலுள்ள மாங்கனி; மன்மதனைப்போன்றவனே யெனினுமாம்; கா—காப்பாற்று; நா ஒன்று பா—நாவில் பொருந்திய பாட்டு.

PRINTED AT THE GUARDIAN PRESS, BROADWAY, MADRAS.